இந்நூலை ஆய்ந்து
அச்சிட ஏற்றதென ஆதரவு நல்கிய
பெரியோர்க்கும்
திருமலை திருப்பதி தேவஸ்தான அதிகாரிகளுக்கும்
எனது வணக்கத்துடன் நன்றி!

# இராமாயண வெண்பா

ஆக்கம்—சிறுகுறிப்புடன்
கவிரத்ந - கண்டீரவ. செஞ்சொற்கவி
அபிநவ பட்டர்பிரான்
அபிநவ வித்யா-பாஸ்கர
வித்யாரத்ந

**T. S. ராஜகோபாலன், B.A., L. T.**

முன்னாள் தலைமையாசிரியர்
இந்து உயர்நிலைப் பள்ளி
திருவல்லிக்கேணி

விற்பனை உரிமை
**ஸ்டார் பிரசுரம்**
72, பெரிய தெரு
திருவல்லிக்கேணி, சென்னை—600 005

**First Edition : January, 1990**
Copy Right : T. S. RAJAGOPALAN
Number of Copies Printed : 1000

**PRICE Rs. 15-00**

The sale proceeds of this book will be
Donated to
(THIRUKKANNAPURAM)
SRI SOURIRAJA PERUMAL
KAINKARYA SABHA (REGD.)

Sales Right :
STAR PUBLICATIONS
72, BIG STREET
TRIPLICANE, MADRAS-600 005
PHONE : 844740

Printed at : Sri Gomathy Achagam
41, Soorappan Street, Triplicane, Madras-600 005

# முன்னுரை

தேவருலகில் நூறு கோடி சுலோகங்களாகப் பரவி வரும் இராம சரிதையில் ஓரளவாவது இங்குள்ளோர் அறிந்து கொள்ள வேண்டுமென்ற அவாவினால் பிரமன் வான்மீக முனிவருக்கு அருள் செய்ததால், முதன் முதலில் இராமாயணம் இணையில்லாத காவியமாக வெளிவந்தது. இதிகாசங்களுள் முதன்மை பெற்று விளங்கும் இக்காவியம் விளக்குவன, சமூக வளனுக்கான நற்பண்புகளும், இராமபிரானது சீலகுணம், வீரப்பாடு, நட்புணர்வு, கருணை, சரணமடைந்தவர்கட்குப் புகலாயிருத்தல் போலவன மூமாம்.

இராமபிரான் ஒரு வேடுவனையும், ஒரு வானரத்தையும், ஓர் அரக்கனையும் தன் உடன்பிறந்தோரினுஞ் சிறந்தவரெனக் கொண்டு பழகியது, உலகம் பாராட்டும் பண்பாகும். அன்றியும் கொடுமையின் எல்லை கடந்த இராவணனிடத்துங் கருணை கொண்டு, அவனையும் ஏற்றுக்கொள்வது தனது பேறாகக் கருதினான்.

இப்பெருமானது கருணையையும் விஞ்சியது, பிராட்டியின் கருணை. தன்னைச் சூழ்ந்து, இரவும் பகலும் இடையறாது துன்புறுத்தி வந்த அரக்கியரிடமுங் கருணை கொண்டு, அவர்கள் அனுமானது சீற்றத்துக்கிலக்காகாமல் இவள் காப் பாற்றினாள். கொடிய கருத்துடன் அணுகிய இராவணனுக்கும் இவள் உபதேசஞ் செய்து அவனைக் காப்பாற்ற முயன்றாள். தனது கற்புக் கனலால் இலங்கையை அழித்துத் தான் விடுதலை பெறக் கூடுமாயினும், இவள் தனது கணவனது வீரத் தாலேயே விடுதலை பெற விரும்பித் தனது பாரதந்த்ர்யத்தை நிலை நாட்டினாள் இவற்றையே மனத்துக்கொண்டு வான்மீகி பகவான், இராமாயணம் ''ஸீதாயா: சரிதம் மஹத்'' என்று பாராட்டினார்.

இவ்வாறு பல்வகையாலுஞ் சிறப்புற்ற இச்சரிதத்தைச் சிறிய நூலாகவாயினும் வெளியிடுவது இப் பிறவியிற் பெறும் பேறெனக் கருதி வரையத் துணிந்தேன். ''காக்கை வாயிலுங் கட்டுரை கொள்வர்'' உலகோர். ஆதலால் இதற்கு ஆதரவு நிகழுமென நம்புகிறேன்.

ஸ்ரீமான் C. ஜெகந்நாதாசாரியார், M.A., L.T., Dip in Geog., வித்வான், தமிழ்த்துறைத் தலைவர், விவேகாநந்தர் கல்லூரி, மயிலை, இந்நூலின் கையெழுத்தேடுகளை ஆய்ந்து திருத்தங்களைத் தெரிவித்து எனக்கு ஊக்கமளித்தார். இப் பேருதவிக்குக் கைம்மாறு அன்பு கலந்த நன்றியுடன் நாளும் பாராட்டுதலேயாகும்.

இந்நூலைச் செவ்வனே அச்சிட்டுத் தந்த திருவல்லிக்கேணி ஸ்ரீகோமதி அச்சகத்தினர்க்கு எனது நன்றியை நவிலுகின்றேன்.

ஆசிரியன்

# பொருளடக்கம்

சுந்தர காண்டம்



யுத்தகாண்டம்

## காப்பு

சீராம ராமனெனத் தேன்பொழிவாய்ப் பாருய்யச்
சீரார் கவிதைச் சினையேறிச்— சோராமற்
கூவியமர் வான்மீகக் கோகிலத்தின் கோப்பெல்லாங்
கூவுவமே கைகள் குவித்து. 1

குளப்படிபோல் மாகடலைக் கூசாமல் தாண்டும்
அளப்பரிய வாற்ற லனுமான்— வளப்பமெழுந்
தேசனிவன் சேவடியே சன்மமெனுஞ் சிந்துதனைப்
பூசலறத் தாண்டும் புணை. 2

சானகியின் சோகத் தழலாலே வாளரக்கர்
மாநகரைச் சுட்டவித்த மாவீரன்—தேனனைய
தாசரதி நாமந் தனைப்பயிலும் மாருதியைப்
பேசுவமே பேரப் பிறப்பு. 3

சீதையொடு சீராமன் சேர்த்தி வளனிதனைக்
காதலெழக் கண்டு களிப்புறுவோம்—பேதுறவும்
கம்பலையு மாகுலமுங் காணாம லெஞ்ஞான்றும்
செம்மைவளம் வாய்க்குஞ் செறிந்து. 4

---

1. சினை-கிளை. கோப்பு-பெருமை. வான்மீகி முனிவரைப் பற்றிய சுலோகம் 'கூஜந்தம்'' ஒப்பு நோக்கு. 2. தேசன்—ஒளிவாய்ந்தவன். சிந்து-கடல், பூசல்-வருத்தம், மாருதி-அனுமான், ''கோஷ்பதீ-க்ருத'' என்ற சுலோகம் ஒப்பு. 3. தாசரதி-இராமன் ''ய: சோக வஹ்நிம்'' என்ற சுலோகம் ஒப்பு. 4. பேதுறவு-அறிவின் கலக்கம். கம்பலை-நடுக்கம், ஆகுலம்-குழப்பம், செறிந்து-அடர்ந்து.

# பாயிரம்

ஒருயிரின் துன்பத்தா லுள்ளத் துடிதுடிக்க
வாரிதியாய்க் கண்ணீர் வடித்தமுனி— ஆருயிர்தம்
துன்பக் கடல்வற்றச் சொன்னானாற் சீராம
னின்பக் கவிதை யிதத்து. 1

பல்லுயிர்க்கு மோருயிராய்ப் பல்குங் கருணையினன்
மெல்லியலாள் தேவியுடன் மேதினியில்—அல்லலிக
வந்துதித்துக் காத்த வகைதன்னை யிம்முனிவன்
தந்தவகை சாற்றுவனான் தேர்ந்து. 2

காலம் புரளும் கருத்துக்கள் மாறுவன
மாலால் வளர்கருணை மாறுவதோ?—கோல
விராமன் கருணைநல மிவ்வுலகி லென்றும்
பராவும் படியிலதாய் வாய்ந்து. 3

நாடு நலமுறுமே நல்ல நெறியாலே
நாடும் நெறியிதனை நல்குவதாம்—தேடரிய
சீராமன் தன்சரிதை சிந்தையிலே சேர்த்துயலாம்
வாராமல் மாளத்துனி. 4

---

1. ஒருயிர்--கிரௌஞ்சப் பறவை. இப்பறவையின் துன்பத்தைக் கண்ட முனிவன் ''மாநிஷாத'' என்ற சுலோகத்தை ஓதி, இது காரணமாக இராமாயணத்தைப் பாடினான். 2. பல்கும்—பெருகுகின்ற, 3. மால்-அன்பு, பிரேமம். இராமன் நம்மிடம் கொள்ளும் பிரேமமும் அதன் விளைவான கருணையும் எப்போதும் நிலைத்திருப்பன. 4. துனி-துன்பம்.

## பால காண்டம்

### 1. வேள்வி

பொன்னின் வளங்கொள் புரியா மயோத்தியிலே
மின்னு மணிமுடியான் விண்ணிறைபோற்—பன்னரிய
சீலன் தயரதன்றன் செல்வஞ் செழித்தடரக்
கோலுயர்த்தன் கொற்றங் குவித்து. 1

ஆண்டோ ரறுபஃதி னாயிரமு மாகியிவன்
மாண்பார் மகவொன்று வாய்ந்திலனாய்க்—காண்டற்
கரிய மகமொன் றருமுனிவர் தம்மால்
உரிய வனைந்தனனே யோர்ந்து. 2

ஆங்குயரும் விண்பா லவியேற்குந் தேவரெலாம்
பாங்குறவே பாற்கடலில் தோய்வானை—ஓங்குபுகழ்
நாரணனை நாவோங்க நன்கேத்திச் சாற்றினரே
ஆரணத்த தோத்திரங்க ளார்த்து. 3

"மூவா முதலுருவே! மொய்ம்பின் முகிழ்நிதியே!
தேவா! திரண்டடருந் தெவ்வொடுக்க—மேவிப்
புரந்தளிப்பாய் நீயே புகலாவா யெங்க
ளரந்தையிதைப் போக்குவா யாய்ந்து. 4

---

1 பொன்-லக்ஷ்மி, செல்வம். வளம்-அருள், மிகுதி விண்ணிறை இந்திரன்; வைகுந்தத்தில் நாராயணன். கோல்-செங்கோல். கொற்றம்-வெற்றி. 2. அறுபஃதினாயிரம்-அறுபதாயிரம். மகவு-மகன் மகம்-வேள்வி; யாகம். 3. ஆரணத்த-வேத மயமான. 4. துதித்த வகை. மொய்ம்பு-வலிமை. முகிழ்நிதியே!-அரும்பும் நிதியாக வாய்ந்தவனே! மேவி-அவதரித்து. அரந்தை-துன்பம். புரந்து-காத்து. புகல்-சரண்.

"ஈரைந்து சென்னி யிராவணனா மோரரக்கன்
ஓரைந் தொடுக்கி யுயர்ந்தனனே—போரா
லுலைக்குமோ ருள்ளத்தா னோவதே துன்பால்
மலைக்குமா லெங்கள் மனம்.

"வரமளித்த எம்மை மதித்திலனாய் நாளும்
உரமடர்த்துத் தீயனவே உள்ளத்— துறவளர்ப்பான்
தானென்றுந் தற்கென்றும் வாழுந் தகையனிவன்
ஊனமெலாஞ் செய்வா னுருத்து.

"எம்மா லழிவிலனா யென்று மிடர்பெய்வான்
விம்மும் புயவலியால் வீறுறுவன்—செம்மை
யுறுநெறிக்காம் மெய்ய ருரவோர்த மீட்டம்
இறமுறிக்குந் தீம்ப னிவன். 7

"தரணிக் கதிபன் தயரதன்ற னன்பிற்
குரிய புதல்வ ரொருநான்—குருவினிலே
தோன்றி நெறிகாப்பாய் தேரலா னிவன்கொள்ளு
மான்ற பகையை யகைத்து." 8

செய்வ னெனவோதிச் சீமான் மறைந்தனனே
வையத் தடர்ந்தனரே வானவர்தாம்—தெய்வ
வலங்கொண்ட வானரர்க ளாகி யுதவ
நலங்கொண்ட நாரா ணற்குத் தாம். 9

---

5. இராவணனால் பெறும் துன்பம். ஈரைந்து சென்னி-பத்துத் தலைகள். ஓரைந்து ஒடுக்கி-துன்புறுத்தும் ஐந்து புலன்களைவென்று. உலைத்திடும்-துன்புறுத்தும்மலைத்தல்-வருந்துதல். 6. உரம்-பலம், வலிமை. உருத்து-நினைத்து. எம்மால்-நாங்கள் அளித்த வரங்களின் பலத்தால். இறமுறிக்கும்-அழிப்பான். 8. புதல்வர். உருவிலே-புதர்களாய். ஆன்ற-அடர்ந்து நிறைந்த. 9. தெய்வவலம் - தேவர்களுக்கான வலிமை. நாரணற்கு நன்கு உதவ, வானரர்களாகி வையத்து அடர்ந்தனர்.

முறையினிலே வேள்வி முடிவுறவும் வேந்தன்
குறையறவே நின்றான் குரவர்—"அறைபுகழார்
வேந்தே! நினதாம் விருப்பமெலாங் கைகூடும்
ஏந்தால்!" எனவுரைத்தா ரீண்டு. 10

## 2. திருவவதாரம்

மின்னன்ன மேனி வடிவொன்று வெந்தழலிற்
பொன்னின் கலசம் புகரெழவே—மன்னக்
கரந்தனிலே தாங்கியதாற் காவலன்றன் கைகள்
சிரந்தனிலே சேர்த்தான் தெளிந்து. 1

அருகுற்ற வாசிரிய னவ்விறைவற் கோதும்:
பொருவற்ற பாயசமே போந்த—பரிவுற்று
நின்தேவி மார்க்கிதுவே நீணிலத்தார் கோமானே!
அன்போ டளிப்பாய் பகிர்ந்து. 2

பாயசத்திற் கோசலைக்குப் பாதியையும் பின்மிகுந்து
தோயுமதிற் பாதி சுமித்திரைக்கும்—நேயமெழச்
சேடத் தொருபாதி சேர்த்தனன்கோ கைகயிக்கும்
சேடஞ் சுமித்திரைக்குந் தேர்ந்து. 3

கருவுற்றுக் காவலன்றன் தேவியர்தாம் பெற்றார்
பொருவற்ற நால்வர் புதல்வர்—விரிவுற்ற
சோதியாய்ச் செவ்வியினாற் சொற்கடந்த சேணுறையும்
ஆதியான் சோதி யடர்ந்து. 4

---

10. குரவர்-ஆசிரியர்; வசிட்டன் முதலோர்.

1. பாயசத்துடன் ஒரு புருஷன் தோன்றினான். புகர்-சோதி. கரந்தனிலே மன்னத் தாங்கியது. 2. பொரு-ஒப்பு. போந்த-போந்தது. 3. நேயம்-அன்பு. சேடம்-மிகுந்திருப்பது. கோசலைக்குப் பாதியும், சுமித்திரைக்குக் கால்பங்கும், கைகேயி சுமித்திரை இவர்களுக்கு அரைக்கா லரைக்காலும் அளித்தான். 4. சேண்-ஆகாயம். விரிவுற்ற-படர்ந்து, அடர்ந்த. ஆதியான்-நாரணன், முழுமுதற் கடவுள், சொற்கடந்த-வருணிக்க இயலாதவாறு.

கோசலையாள் பெற்றாள் குழவி யிராமனெனுந்
தேசினனைச் சித்திரையிற் சேர்புனர்—பூசமதில்
நம்பி பரதனை நல்கினளாற் கைகேசி
செம்மைத் திருப்பூச நாள். 5

தகையி னிலக்குமணை சத்ருக் கனரை
மிகவிளங்கும் ஞான விளக்காய்த்—திகழுஞ்
சுமித்திரையோ பெற்றளித்தாள் சோபனவா யில்யம்
நிமிர்த்தநாள் தன்னில் நிறைந்து. 6

மன்னன் மகிழ்வுற்றான் மங்கலமா நீராடிப்
பொன்னின் குலந்தான் பொலிவுறவே—மின்னுஞ்
சுடரொளியா மந்நால்வர் தோன்றல் முகத்தைப்
படர்தரவே நோக்கும் பரிந்து. 7

புதல்வர் தமக்காம் புனிதச் சுபங்கள்
விதியி னியக்கினனால் வேந்தன்—மதிவாய்
வசிட்டன் மலரடியில் மன்னியிவ ரேற்றார்
விசிட்ட கலையாங் கடல். 8

தயரதனோ செம்மாந்தான் தன்னருஞ் செல்வர்
வியமுறவே மேன்மேலும் விஞ்சை—நயனனைத்துங்
கற்றிடவும் காவலர்க் காவனவாங் கல்வியெல்லாம்
தெற்றெனவே யார்வஞ் செறிந்து. 9

---

5. தேசு-புகர். இராமன் அவதரித்தது சித்திரையிற் புனர்பூசம்; பரதன் அவதரித்தது சித்திரையிற் பூசம். 6 ஆயில்யம் நிமிர்த்த நாள்-ஆயில்ய நன்னாளில். 7. பொன்னின் குலம்-சிறப்புடையசூரியவம்சம். நோக்கும்-நோக்கினான். பரிந்து படர்தர நோக்கும். பொலிவுற நீராடி, நோக்கும். 8. விசிட்ட-மேன்மையான. இவர் (இந் நால்வர்) மன்னி, ஏற்றார். 9. செம்மாந்தான்-மிகக் களித்தான். விஞ்சை-வித்தை தெற்றென-தெளிய. செறிந்து-அடர்ந்து. காவலர்-மன்னர்.

எண்ணரிய நீர்மையினா லீடில்லா வீரத்தால்
மண்ணிதுவும் வானும் மகிழ்வுறவே—நண்ணரிய
கீர்த்தியுட னோங்குங் கிளரொளியி ராமனென
வார்த்தைமிக ஓங்கியதால் வாய்ந்து. 10

## 3. தாடகை வதம்

முனிவரன் கௌசிகனோர் மொய்ம்பி னிராமன்
றனையுடன் தன்பாலே கொள்ளும்—நினைவினிலே
மன்னன் தயரதன்பால் வந்தனனே காக்கவெனத்
தன்னரிய வேள்விதனைத் தான். 1

“இருவர் கொடிய ரிராக்கதரென் வேள்வி
தரமுறா வண்ணந் தகைவர்—பொருவிலனாம்
வீர னிராமனைநீ வேந்தே! அனுப்புக”வென்
றாரப் புகன்றா னவன். 2

“பிராயமோ ரீரெட்டும் பெற்றிலனே” யென்று
விராய கலக்கத்தும் வேந்தன்—பராய
மறைவலனாந் தேசன் மனங்கூறச் செல்வத்
திருமகனை நல்கினனே தேர்ந்து. 3

இளவ லுடன்படரச் சென்றா னிராமன்
களமில்லா மோனன் கருதி—வளமுறுதொல்
விஞ்சையதோ டத்திரமும் மேவலிலே நல்கிடவே
எஞ்சலற ஏற்றா ரிவர். 4

---

10. மண்-பூமியிலுள்ளோர். வான் - வானத்திலுள்ள தேவர்கள்.

1. விசுவாமித்ர முனிவன் வந்தான். மொய்ம்பின்-வலிமை யுடைய. இராமனை அழைத்துப் போக முனிவன் வந்தான். 2. முனிவன் விருப்பம். தகைவர்-தடுப்பர். 3. வேந்தன் கலக்கம். ஈரெட்டு-பதினாறு. விராய-பொருந்திய. தேசன் வசிட்ட முனிவன். 4. இலக்குமணனுடன் சென்றான் இராமன். களம்-கறுப்பு, வஞ்சகம். மோனன்-முனிவன். விஞ்சை-வித்தை. எஞ்சல்-மிகுதி. இளவல்-இளையவன், தம்பி,

பலையோ டதிபலையும் பற்பலவாங் கல்வி
யலகிலவா மந்திரமும் வாய்ந்த—கலைவலவன்
ஓதியிட விவ்விருவ ரோதி யறக்கற்றார்
கோதறவே யார்வங் குவிந்து. 5

அதரிடையே பாலை யடர்ந்ததனைச் சுட்டி
முதுவோனம் மோனன் மொழிந்தான் :—"இதுவாகும்
கொல்லை யரக்கி குவடன்ன கொங்கையினாள்
அல்லின் வணத்தாள் வனம். 6

"ஆயிரமா மானைதமி னாற்றலெலாம் வாய்ந்திவளோ
மாயமுறப் போர்செய்ய வல்லள்காண்—ஏயமிதென்
றெண்ணற்க எய்கணையை யேவி யிவள்தன்னை
மண்ணின்பால் தாழ்விப்பாய் மாய்த்து." 7

ஆயிடையாங் கேகினளா லவ்வரக்கி தாடகையும்
தீயெனவே காய்ந்து திசையெங்கும்—பாயப்
புழுதியோடு கல்லும் பொழிந்தனளே கூடிக்
கழுதினங்கள் பாயக் கலித்து. 8

கண்ணாற் குறிக்கவக் கௌசிகனும் காகுத்தன்
கண்ணி னிமைப்பிற் கணையெய்தான்—திண்ணியதாம்
அல்திரிவா ளாகத்தி லாழ்ந்துவெளி வந்ததுவென்!
புல்லர்க்கு நல்லுரையே போல். 9

---

5. இவர்கள் முனிவனிடம் கற்றவை. அலகில்லா-எண்ண முடியாத; ஓதி...கற்றார். 6. ஆங்கு வழியில் ஒரு பாலை வனத்தைக் காட்டி முனிவன் கூறியது. அதர் வழி. கொல்லை—கொடிய, குவடு—மலை. அல்லின் வணம்—இருளின் நிறம். 7. அவளது வலிமை. ஏயம்—இழிவு; பெண்ணைக் கொல்வது. 8. அவளது வருகையால் பேய்களும் பயந்து ஓடின. கழுது—பேய். 9. இராமன் கணை எய்தது. அல்திரிவாள்—இருளில் திரியும் அரக்கி. புல்லர்—கீழ்மக்கள். நல்லுரை போல்: நல்லுரை படியாமல் வெளிவந்து விடும்.

"நன்றிதுநீ செய்தனையால் நாமுகந்தோ" மென்றோதி
நன்றி நவின்றனனே நன்முனிவன்—மின்திகழும்
மேனியரா மவ்விருவர் மேவலிலே பின்படர
மேனிலையான் தான்நடந்தான் மேல். 10

## 4. முனிவன் வேள்வி

சித்தாச் சிரமத்திற் சேர்ந்தம் முனிவரனும்
சித்தந் தெளிந்து செறிந்தொளிரும்—பத்தியிலே
மோனத் தமர்ந்தனனே மூண்டதுவே வேள்வியழல்
வானத் தொளிர வளர்ந்து. 1

கையில் வரிசிலையைக் காளையிவர் தாமேந்தி
வெய்ய கணைதொடுத்து வீங்குபுகழ்—மெய்யன்றன்
வேள்விதனைக் காப்பான் விழிப்புடனே நின்றனரே
நாள்முழுதும் நோக்கடர நட்டு. 2

வேத முழக்கிடையே விண்வாய் நிசிசரரோ
ஓதக் கடலதனினோங்கியெழு—மோதையுடன்
வேள்வித் தழன்மிசையே வீழச்செந் நீருனும்
மாள்வின்றிப் பெய்தார் வளைந்து. 3

ஐய னிராம னடுகணைகள் தூவினனே
நைவி லரக்கர் நலிவுற்றார்—வெய்ய
சரமொன்றாற் சாய்ந்தான் சுபாகுவெனுந் தீம்பன்
தரையொன்றி மாய்ந்தான் தளர்ந்து. 4

---

10. முனிவன் நன்றி கூறியது. மேல் நிலையான்—சிறந்தவன், தவமுனி.

1. வேள்விக்காக முனிவன் மோனமுற்றான், மோனம்—மவுனம். 2. இராமனும் இலக்குமணனும் கையில் சிலையேந்தி நின்றனர். காப்பான்—காப்பதற்காக. 3. அரக்கர் வேள்வியைக் கெடுக்க முயன்றனர். ஓதம்—அலை. செந்நீர்—உதிரம். ஊன்-மாமிசம். 4. இராமனது கணையால் சுபாகு இறந்தது. ஐயன் அழகன், இராமன், வெய்ய—கொடிய; அம்புகள் அழலைக் கக்குவன.

மாரீச னாந்தலைவன் மாள்வின்றி வன்கணையால்
நூறாகுங் காதத் தொலைவினிலே—காரார்
கடற்கப்பால் வீழ்ந்தனனே காயமெலாம் புண்ணால்
இடர்பட்டுத் துள்ளத் துடித்து. 5

போரக் களித்தப் புனிதர்கோன் கௌசிகனும்
ஆரத் தழுவினனா லண்ணலை—"போரேறே!
அண்ணால்! நீ வாழிய" என்றாசி பெய்தனனே
எண்ணரிதாம் பாச மெழுந்து. 6

"சித்தாச் சிரமமிதுவாம் சீயங்காள்! இவ்வேள்வி
சித்தமுறச் செய்தீர்நும் தீரத்தால்—மெத்த
வளங்குலவ வாழ்வீர்" எனத்தழுவி மெய்யன்
உளங்குளிர வோதினனா லாங்கு. 7

பின்னர் மிதிலையிலே பெய்நலத்த சான்றோனாம்
மன்னன் சனகன் வனைதருமோர்—தொன்னலத்த
வேள்விதனைக் காண்பான் விரைந்தா னிவர்தொடர
வாள்வதனன் மோனர் வரன். 8

மிதிலைநக ரெல்லையிலே வெற்றோடுந் தூய்தாம்
பதியி லிராமன்றன் பாதம்—பதியப்
புழுதியிடைப் பூத்தனளே பூவை யகல்யை
கொழுமியசீர்க் கோதமற்கா ஞன்று. 9

5. மாரீசன் நூறு காதங்கட்பால் விழுந்தான். காயம்—உடல். 6. முனிவன் இராமனைப் புகழ்ந்தான். 7. முனிவன் அவ்விருவரையும் பாராட்டி, "சித்தாச் சிரமாம் இது உங்களால் இப்பேர் நிலைபெற்றது" என்றான். 8. முனிவன் மிதிலைக்குச் சென்றான். பெய்நலத்த—நலத்தால் மிக்க. வாள் வதனன்—ஒளிமிக்க முகத்தையுடையவன். 9. மிதிலையின் எல்லையில் நிகழ்ந்தது. இராமனது பாதம் படிதலும் புழுதியிலிருந்து அகலியை உருவுற்று எழுந்தாள். பூவை—பெண். கொழுமிய—செழித்த. கோதமன்-கௌதம முனிவன், ஊன்று—ஊன்றுகோல், துணைவி,

ஆயிரங் கண்ணுடைய னாசையினா லல்லலுறப்
பாய பழிவா யகலிகையும்—வாயும்
குறைவற்றுத் தூயோன் குரைகழலால் மாண்பே
நிறைவுற்றாள் தேசு நிலைத்து. 10

## 5. அரன் கார்முகம்

சனகன் தவமுனியைத் தானேற்றுச் சாற்றும்,
"அனக! வருவீர் அடருங்—கனகப்
புகரெழவே நும்முடனே போந்தவிவர் யாவர்?
பகருவிரோ பண்புடையீ ரெற்கு." 1

"தரணிக் கதிபன் தசரதன்றன் செல்வர்
வருணிக்க லாகா வலியால்—முரண்மிக்க
அல்திரிவோர் தம்மை யவித்திவரென் வேள்விதனை
அல்லலிகக் காத்தளித்தா ரால். 2

"மூத்தோ னிராமனிவன் மொய்ம்படர்ந்த தாடகையை
மாய்த்தான் கணையொன்றால் மற்றுமிவன்-வீய்த்தான்
அகலிகையின் சாபத்தை அன்பாகேள்" என்றான்
நெகிழாத நேம முனி. 3

"இவ்விளஞ் சீய மிலக்குவனா மென்றென்றும்
தெய்வமெனத் தேச னிராமனையே—கைவணங்கிச்
சாயையெனத் தான்தொடரும்" என்றான் தவந்தன்
பாயபுகழ் மாமுனிவன் வாய்ந்து. [னாற் 4

---

10. இவளது பழிக்குக் காரணம். அல்லலுற—துன்பமுற. பாய—பரவிய. தேசு—இயல்பான ஒளி.

1. சனகன் முனிவனைக் கேட்டது. அனக—குற்றமில்லாத முனிவனே! கனகம்—பொன். புகர்—ஒளி. 2. முனிவன் கூறியது. அல்திரிவோர்—அரக்கர். 3. இராமனைப் பற்றிக் கூறியது. நேமம்—தவத்திற்கான முறை. 4. இலக்குவனைப் பற்றி முனிவன் கூறியது. சீயம்—சிங்கம். சாயை—நிழல், பாயபுகழ்—பரந்த புகழ் வாய்ந்த.

இங்ங னியம்பினனே பின்னுமிவன், "எம்மரசே!
இங்க ணிராமன்றா னேகியதோ—நுங்கண்ணோர்
வைப்பா மரன்சிலையைக் காணும் மனங்கொண்டே
ஒப்பில்லா வூக்கத் திவன்." 5

முனிவன்முன் மன்னன் மொழிந்தனனே தாழ்ந்து:
"பனிமலராள் போல்வா ளென் பாவை—தனையை
வதுவைக்காஞ் சுல்கமிது வைத்துளனான் வீர
னதிபற்கே யாகு மிவள். 6

"எவ்வீரன் நாணேற்றி யிச்சிலையைத் தான்வளைப்
அவ்வீர னென்மகட்கே யாமென்றேன்-தவ்வாத [பான்
ஆற்றலதால் மேலுற்றா ராற்றலெலாம் வீணாகித்
தோற்றனராற் சோர்விற் சுளித்து, 7

"வேள்வி யிதைமுடித்து வில்லையிவ ணுய்விப்பன்
வாள்பெய் வதனத்திம் மைந்தன்முன்—நீள்செய்
தவத்தாற் சிறந்த தவநிதியே!' என்றான்
தவத்தின் தரங்கண்டான் மன். 8

பெரிதாய பேழையொடும் பேர்க்ககிலா வில்லை
அரிதீர்த்தை யாயிரவர் கூடி—விரவும்
அரசர்முன் தாமீர்த் தடைவித்தா ரெங்கும்
உருமெனவே ஓங்க வொலி. 9

---

5. இராமன் அரன் சிலையைக் காணவிரும்புவதாக முனிவன் மொழிந்தான். வைப்பு—வைத்துக் காக்கப்படுவது. 6. சனகன் கூறியது. பனிமலராள்—லக்ஷ்மி. தனையை—மகள். 7. மேலுங் கூறியது. அவ்வில்லை நாணேற்ற இயலாமல் மன்னர் பலர் வெள்கினர். தவ்வாத-குறையாத. சுளித்து - சினந்து, ஏமாற்றத் தால். 8. வேள்வி முடிந்ததும் இச்சிலையை இங்குக் கொணர் விப்பேன் என்றான் சனகன். இவண்—இங்கு. உய்விப்பன்—சேரும்படி செய்வேன். 9. பேழை—பெட்டி. ஐயாயிரவர் ஆர்த்து. அரிது ஈர்த்து—பெருமுயற்சியால் இழுத்து. உரும்—இடி.

கரத்தெடுத்துக் கார்முகத்தைக் காகுத்தன் நாணை
உறத்தொடுக்க வோங்கு மொலியோ—டிறத்துடித்துத்
துண்டிரண்டாய்த் துள்ளித் துவண்டதுவே யச்சிலை
அண்டரினம் போற்ற வடர்ந்து. [வான் 10

### 6. கடிமணம்

"என்மருக னே!" யென் றிராமனைத் தானணைத்துச்
செம்மற் சனகனிது செப்பினனே:—"இம்மைப்
பயன்கொண்டேன் நான்பெற்ற பாவையினால் மூவா
நயன்கொண்டேன் நான்செய் தவம்." 1

ஓல்லை வருகவென ஓலை விடுத்தனனே
செல்வத் தயரதற்குச் சீதையெனும்—வல்லரியைச்
சீமா னிராமனுடன் சேர்க்கும் வதுவைக்காக்
கோமான் சனகன் குறித்து. 2

"நான்செய் தவமிதனால் நான்பெற்ற மாமணியாம்
வான்பெய் புகழானை மன்றலிலே—மான்செய்
நயனத்த பொன்னுடனே நான்காண்பன்" என்றான்
வயமுற்ற கோசலர்தம் மன். 3

ஆசான் வசிட்ட னமைச்சர் பரிசனமும்
ஆசைக் கடல்திளைத் தார்வத்தால்—தேசன்
முடிவேந் துடன்சென்றார் முற்றா மகிழ்வில்
கடிமணங் காண்பான் களித்து. 4

---

*10. வில்லை முறித்தான் இராமன். இற, ஒலியோடு துடித்து—முறியுமாறு ஒலியோடு துடித்து. அண்டர்—தேவர், அடர்ந்து போற்ற, கரத்து எடுத்து—கரத்தில் ஏற்று.*

*1. சனகன் கொண்ட மகிழ்ச்சி. சனகன் தயரதனுக்கு ஓலை அனுப்பினான். வல்லரி—கொடி; கொடி போன்ற சீதை. 3. தசரதன் பெருமகிழ்ச்சி. மன்றல்—திருமணம். பொன்—சீதை, பிராட்டி. மணி பொன்னாரத் திறம் பெறும். மான் செய் நயனத்த—மான் போல் அழகிய கண்களுடைய. 4. முற்றா—முடிவுறாத.*

வசிட்ட சதானந்த கௌசிக மெய்யர்
விசிட்ட மறைவல்லார் மேலாஞ்—சுசிட்டர்
மதிநல்லார் தேர்ந்து வரைந்தனரே மாணார்
வதுவைக்காம் கால வளம். 5

உழுபடைச் சாலி லுதித்தவை தேகி
விழுமிய சீரானை வீரந்— தழுவுஞ்சீர்த்
தோள னிராமனாஞ் சோதியைத் தான்பருகும்
வாளன்ன கண்ணில் மடுத்து. 6

அருளுருவாங் காகுத்த னவ்வணங்கைக் கண்ணால்
அருளினுக்கா மார்கலியே யென்று—பருகி
வலைந்தனனே கண்டத்தில் மங்கலநாண் தன்னைப்
புனையிழையோ பூரிக்கப் பூண்டு. 7

இலக்குமண ராதியரம் மூவர் குலத்தால்
மலக்குமெழில் தானொளிர மாறில்—இலக்கெனவே
ஊர்மிளை யாதியரா முத்தமியர் மூவரைத்தம்
சார்வெனக் கொண்டார் மணந்து. 8

மண்ணோ டுயர்வானில் வாழ்த்தொலியே மண்டியதால்
கண்ணுக் கரிதாமிக் காட்சியென—எண்ணிக்
களித்தனரே காசினியோர் கண்ணுக்கா மின்பில்
திளைத்தனரே தேவர் திரண்டு 9

---

5. வசிட்டர் முதலானோர் கடிமணத்திற்காம் நாளை நிச்சயித்தனர். விசிட்ட—மேலான. சுசிட்டர்—சிறப்புடையோர். 6. வைதேகி—சீதை. உழுபடைச்சாலில் அவதரித்தவள், இவள். விழுமிய—சிறந்த 7. இராமன் அவளது கழுத்தில் மங்கல நாணை வலைந்தான். ஆர்கலி கடல். பிராட்டி, பெருமானினும் அருள் மிக்கவள் என்பர் பெரியோர். புனையிழை சீதை. பூண்டு—அணிந்து. பூரிக்க—பெருமகிழ்ச்சி கொள்ள. 8. இலக்குமணன் முதலான மூவர், ஊர்மிளை முதலான நங்கையரை மணந்து கொண்டனர். மலக்கும்—மயங்கச் செய்யும். இலக்கு—நாடும் பொருள். சார்வு—துணை. 9. எங்கும் களிப்பு.

பேரா மகிழ்வுற்றுப் பூபன்தன் புத்திரரை
ஆரத் தழுவினனே ஆசிபல—வாரத்திற்
பெய்து மருகியரை வாழ்த்தி யினிதேற்றான்
நைத விலதாம் நலத்து.

## 7. பரசுராமன்

குதுகலமே கூர்ந்தடரக் கோசலர்தங் கோன்றன்
பதிதனையே நாடிப் படர்ந்தான்—"இதுவோ
இதுவரையென் னெண்ணத் தெழுந்ததனி வேட்கை
இதமுறவே வாய்ந்துளதே!" என்று. 1

ஆங்காங் கதரிடையே யாகுலத் தார்த்தனவே
ஏங்கும் விலங்கினமும் வீயினமும்—தேன்கமழுந்
தாரான் தயரதனுந் தான்கலங்கி யவ்விடத்தே
வேரோடே நின்றான் மிறை. ௨

பகரவொணாச் சீற்றத்துப் பார்க்கவ ராமன்
புகரிடையே தோன்றினனே பூபன்—"இகலெல்லாம்
தீர்த்தொளிர்வாய் தஞ்சமென் செல்வர்க்கு மெற்கும்நீ
ஆர்ததிற லோ"யென்றா னங்கு. ௩

வேந்தை மதித்திலனாய் வெம்பி யுகக்கனல்போல்
ஆர்ந்த கதத்தினனா மவ்வீரன்—ஏந்த
லிராமனையே நாடி யியம்பினனே: "என்முன்
விராவுஞ்சீர் வீரனே! நில். 4

---

10. தசரதனது பெருமகிழ்ச்சி. நைதல் இலா நலத்து. இனிது ஏற்றான்-குறைவில்லாத நலம் இதுவென மகிழ்ந்து ஏற்றான்.

1 "நான் இதுவரை எண்ணியது நிகழ்ந்ததே" என்று தசரதன் களித்தான். கூர்ந்து-மிகுந்து. 2. தசரனது கவலை, அதர்-வழி. ஏங்குட்-ஒலிக்கின்ற. வீ-பறவை. மிறை வேரோட நின்றான்—அச்சம் குலையாமல் நின்றான். 3. பரசுராமன் தோன்றினான். பார்க்கவ ராமன்-பரசுராமன். தசரதன் அவனைச் சரணமாகப் பற்றினான். 4. பரசுராமன் இராம னிடங் கூறியது.

"சொத்தைச் சிலையொன்று துண்டித்த சீர்த்தியனே!
மெத்தப் புகழ்கொண்டாய் வீரனென—வித்தகனே!
வைணவமாம் வில்லிதனை வாங்கிக் கரத்தினிலே
வைநுதிவாய் வாளி வனை. 5

"பின்னும் பெருவீரா! மற்போர் பெரிதுகாப்பாய்"
என்றுமுனே காகுத்த னேற்றனனால்—மன்னைக்
கரத்தினிலே வில்லைக் கணையொன்றைப் பூட்டி
உரத்திதுவே கூறு மொளிர்ந்து. 6

"நினதரிய வில்லோடு நின்தவமுங் கொண்டேன்
இனியெனதா மம்புக் கிலக்காய்—முனிவன்றன்
செல்வனே! செப்புவைநீ சேர்வ தெதுதானோ
எல்லே இழந்தனைநின் தேசு." 7

வணங்கி யிராகவனைப் பார்க்கவனோ, "வாழி
அணங்காந் திருவுக் கிறைவா!—நுணங்கும்
இடையா ளிவளுடனே ஏகுகநீ" என்றான்
படியிற் படிவன்றன் சேய். 8

"பிறிதோர் பிறவி பிறந்துளமே!" என்று
மிறையொழிந்து மாவேந்தன் மீண்டான்—பறையோடு
பல்லியங்க ளார்ப்பப் பரிவெழவே சேர்ந்தனனே
செல்வஞ் செழிக்கும் புரி. 9

---

5. பரசுராமன் இகழ்ந்து கூறியது. வைநுதிவாய்-கூர்ந்த முனையுடைய. 6. மற்போரும் செய்யவேண்டுமென்றான் பரசுராமன். வில்லைக் கையிலேந்தி, நாணைப் பூட்டி இராமன் கூறியது. எல்லே...தேசு உனது வில்லையும் தவத்தையும் கொண்டேன். இனி உனக்குப் புகரே இல்லை. 8. பரசுராமன் இராமனையும் சீதையையும் வாழ்த்தியது. அணங்கு ஆம் திரு-அழகால் இலக்குமி போன்றவள். படி-ஒப்பு. படிவன்-முனிவன். 9. மறுபிறவி பிறந்ததாகத் தசரதன் மகிழ்ந்தான்.

மன்புதல்வர் தந்தம் மணாட்டி தம்முடனே
பன்னரிய போகம் புணர்ந்தனரே—பொன்னனைய
கோசலை யாதியரோ கொண்ட களிப்பெல்லாம்
பேசிடினோ மானப் பெரிது. 10

---

10. மன்-மன்னன், மணாட்டி-மனைவி. கோசலை யாதியர்—கோசலை, சுமித்திரை, கைகேயி. பொன்—லக்ஷ்மி. பேசிடின் விவரிக்கப் புக்கால். மானப் பெரியது விவரிக்க இயலாதவாறு பெருகியது என்றவாறு.

# அயோத்தியா காண்டம்

## 1. இராமன்

மாதுலன் வந்தழைக்க மன்னன் கழல்வணங்கி
மேதை பரதன் மிகும்பரிவில்—பேதலியாச்
சிந்தையினன் சத்ருக் கனனோ டுடன்படர்ந்தான்
அந்தமிலா ஆர்வ மடர்ந்து. 1

சீலநல னோடுந் திறல்வீரந் தேசடர
வாலறிவும் வாய்ந்தவி ராமனையிஞ்—ஞாலம்
தனக்கிறையாக் கோரியதால் தக்க நெறியால்
தனக்குவமை யில்லாதா னென்று. 2

சாந்தியொடு மன்னுயிர்பால் தண்ணளியும் பேரன்பும்
வாய்ந்தவிவன் மூரல் வதனத்தில்—தோய்ந்தொளிர
இன்மொழியே பேசுவனா லேத மியம்பகிலன்
வன்மமெதுங் காணான் மனத்து. 3

மூவகையாம் மூத்தோர்பால் மொய்த்தடரப் பத்திசெயும்
தேவெனவே ஆசானைப் பாராட்டும்—மேவலிலே
நன்றெனவே போற்றுமிவன் நற்றம் நுணிதெனினும்
ஒன்றமனங் கொள்ளானாற் கோது. 4

---

1. தனது மாதுலன் அழைக்கப் பரதன் சத்ருக்கனனுடன் சென்றான். பேதலியா—வேற்றுமை கொள்ளாத; பரதனையே பற்றும் பண்புடையோனாகி. 2. குணக்கடலான இராமனை உலகம் தனக்கு இறைவனாக ஏற்க விரும்பியது. வாலறிவு பேரறிவு. வதனம்—முகம். மூரல்—புன்சிரிப்பு. ஏதம்—குற்றம். வன்மம்—தீராப் பகை. 4. மூவகை மூத்தோர்—கல்வி, ஒழுக்கம், வயது இவற்றால் பெரியோர். நற்றம்—நன்மை. மேவல்—விருப்பம். நற்றம்....போற்றுவன்—சிறிது நலம் கண்டாலும் பெரிதாகப் பாராட்டுவான். கோது—குற்றம். ஒன்ற—பொருந்துமாறு. கோது ஒன்ற மனம் கொள்ளான்.

மாந்த ருடன்பிறந்தா ரென்றிவனோ மட்டின்றி
வாய்ந்து நலம்பெய்யும் வள்ளலிவன்—காய்ந்தமனம்
கொள்ளான் கொடும்பகையோர் தம்பாலுங் கூறிடினே
நள்ளா ரிவற்கிலையே காண். 5

படைவகுத்துப் போர்செய்வான் பற்றார் குலைய
மிடல்வலராந் தேவரையும் வீழ்த்தூந்—திடமுடையான்
சீற்ற மறியாதான் சீறிடினோ மூவுலகுந்
தோற்றுக் குலையுந் துவண்டு. 6

மல்கும் விழவினிலே மாந்தர் முனம்நின்று
வல்ல வகையில் நிகழ்த்துமிவன்—வில்லே
மிளிரும் முகத்தில் மிடியிறையுங் காணில்
இளகு மிவனுள்ளம் நைந்து. 7

நன்மனமும் நையு முளமும் நலனளருஞ்
சொன்னயமும் வாய்ந்து துவள்வறவே—உன்னுவன
திண்ண மியக்கவலன் தீரமும் வாய்ந்தனனே
எண்ணற் கினிதா யிணைந்து. 8

மன்மதற்கும் மன்மதனாம் வாமத் திருவுருவன்
மின்வளரும் மேனியினன் வீரத்தால்—தன்னிகரே
இல்லா னிராமன் இணையில் கருணையினால்
எல்லா வுயிர்க்கும் புகல். 9

---

5. மாந்தர் தனது உடன் பிறந்தார் எனக் கருதுவான். காய்ந்த மனம்—கோபம் அடர்ந்த மனம். நள்ளார்—பகைவர். 6. போரில் ஆற்றல். மிடல்—வலிமை. 7. விழாக்களிலே தானே முன் நின்று நிகழ்த்துவான். வில்—ஒளி. மிடி—துன்பம். இறையும்—சிறிதேனும், காணில்—குடிகளிடத்துக் கண்டால். இளகும் : அநுதாபம் கொள்ளும். 8. சொல் நயம்—பேச்சின் இனிமை. துவள்வு அற—அழியாமல். உன்னுவன-நினைப்பன. தீரம்—மனத்திண்மை. 9. மேனியின் கட்டழகு. மின்—ஒளி. வீரம்—வலிமை.

வைகலுமுப் போதும் மறுகுதமில் மாந்தரினம்
தெய்வங்கள் தம்முன் றிரண்டமர்ந்து—கைதொழுவர்
"எம்மிளஞ் சீய மிராம னெமக்குயிராய்ச்
செம்முற வாழியவே" யென்று. 10

## 2. வேந்தன் விருப்பம்

மரபின் விளக்காகி மாறில் குணத்தால்
பொருவே யிலனாய்ப் பொலியுந்—திருமகனாம்
மூத்தோனை மன்னன் முடிக்குரிய செம்மணியாய்ச்
சேர்த்தனனே சிந்தையிலே தேர்ந்து. 1

மூப்பின் பிணிப்புணர்ந்து மூதறியும் வேந்தன்றன்
காப்பாஞ் சுமையைக் கழற்றவென—நீப்பரிய
பாசத் திராமனெனும் பாருக் கருநிதியைத்
தேசனையே சேர்த்தா னுளம். 2

அரசவையைக் கூட்டினனோ ரார்வினிலே வேந்தன்
விரவியதோ ரன்பால் விபுதர்—அரசரொடு
மந்திரிமார் மாமுனிவர் வாழ்த்தி வணங்கினரே
இந்திரனை யும்பரென வொத்து. 3

வேந்தன்றன் னுள்ளடரும் மேவல் விளம்பினனே:
"ஏந்துபுக ழென்னுயிரி ராமனெனுந்—தீந்தேனை
என்னுடனே யாளு மிளவரசா யேற்கவென
உன்னுவதா மென்னுள்ள மோர்ந்து." 4

---

10. வைகலும் மாந்தர். "இராமன் வாழ்க"வெனத் தெய்வங்களைத் தொழுவர். வைகல்–நாள்தோறும்.

1. மரபு–சூரிய வமிசம். 2. மூதறியும்—பழைய முறைகளை அறிந்த. மூப்பே காரணமாக இராமனை இளவரசாக முடிசூட்ட விரும்பினான் வேந்தன். நீப்பரிய—நீக்க முடியாத. அருநிதி—அரிய நிதி போன்ற இராமனை. 3. அரசவையிற் கூடியவர். விபுதர்—பேரறிவுடையவர். உம்பர்—தேவர். வேந்தன் தனது விருப்பத்தைக் கூறினான். மேவல்—விருப்பம். உன்னுவதாம்—நினைக்கும்.

"நன்றிதுவே" யென்று நவின்றனரா லாங்கடர்ந்தார்,
"என்றிதுவோ எங்க ளிராமனையாம்—மன்றதிர
வைத்து மருண்மாமீ தார முடிசூட்டி
மெத்த மகிழுவதோ வாய்ந்து?" 5

இராமன் தனைமடியி லேற்றிறைவன் கூறும்:
"பராவும் படியிதனை நாளை—விராவுமோ
ராவலிலே நின்பா லடைவிப்பன் நீயென்ற
னேவலிலே யேற்பா யிது." 6

மன்னவனைத் தாதையை மட்டில்லா வன்பினிலே
புன்னகையே பூப்ப வணங்கிப்பின்—தன்னன்னை
கோசலைக்குக் கூறினனாற் கோனுளந் தாள்பணிந்து
தேசினி ராமன் களித்து. 7

அன்னையகம் பூரித்தாள், "ஆருயிரே! என்செவிக்கோ
ரின்னமுதே யிஃதாகு மென்றென்றும்—மன்னும்
புகழ்வளரப் பாரைப் புரப்பாய்நீ" என்றாள்
திகழவவள் மேனி மிளிர்ந்து. 8

துணைவி பணிசெய்யத் தோய்ந்துதிரு மால்முன்
அணைவி யருச்சித் திவனோ—இணையிலதாம்
ஆர்வத்தி லன்றிரவு நோன்பி லமர்ந்தனனே
தேர்வுற்ற செம்மல் சிறந்து. 9

---

5. அரசவையில் ஆரவாரம், பெருங்களிப்பால். மன்று—நாற்சந்தி. 6. தசரதன் இராமனிடங் கூறியது. பராவும்—பரவுகிற. படி—பூமி. விராவும்—பொருந்தும். 7. கோசலையின் தாள் பணிந்து, கோன் (அரசனின்) உள்ளம் கூறினான். தேசு—ஒளி. 8. தாயின் மகிழ்ச்சி. அவளது மேனி மிளிர்ந்து திகழ—ஒளியுடன் விளங்க, மன்னும் புகழ் வளரப் பாரைப் புரப்பாய். 9. துணைவி—மனையாள். திருமால்—குலதெய்வமாகிய ஸ்ரீரங்கநாதன். அணைவி—கிட்டி. நோன்பு—அரசேற்பதற்கு முன் கொள்ளும் விரதம். சிறந்து, தேர்வுற்ற செம்மல் இராமன் நோன்பில் அமர்ந்தான்.

புரமடரக் கோலம் பொலிந்து களிப்பே
பரவியதால் மாந்தரெலாம் பண்பின்—இரவிப்
பெருங்குலத்தின் பூணா மிராமன்றன் பேரோ
டருங்குணங்க ளார்த்தார் வகுத்து. 10

## 3. மந்தரையின் சூழ்ச்சி

மாலையிலே மந்தரையாங் கூனி வளநகரின்
கோலமெலாங் கண்டாள் குணக்கடலாஞ்—சீலன்
இராம னிளவரசா மென்றோர்ந்தா ளீனம்
உராவ விவள்கூனோ டொத்து. 1

கைகேயிக் காந்தொண்டிற் கையடையா வந்தவிவள்
நையாத வைரத்தால், "நாளையிவன்—கைம்மாவின்
மேலூர்ந்து வீறுடனே வேந்தாமோ?" என்றாளால்
ஏலாத சீற்றந் திணிந்து. 2

கலங்காத வன்புடைய கைகேசி நெஞ்சும்
நலங்கோடக் கூறுமிவள்: "நல்லாய்!—கலங்காயோ?
நாளை யிராமன் முடிசூடும் நின்வாழ்வோ
கோளிற் கழியுங் குலைந்து. 3

"அன்றொருநாள் மன்ன னளித்த வரமிரண்டை
இன்றுபெறக் கேட்பாயோ என்தேவி!—ஒன்றிதுகேள்
கானகத்தி ராமன்தான் காலமிரண் டேழாண்டு
தானுறைந்து வாழ்வதுவே தான். 4

---

10. நகரில் எங்கும் குதுகலம் நிலவியது. இரவிப் பெருங் குலம்—புகழ்வாய்ந்த சூரிய வமிசம்.

1. கூனி மனங் குலைந்தது. ஈனம் உராவ—மேனியின் கூன் போலே உள்ளமும் ஈனம் கொண்டது ஈனம்—இழிவான எண்ணம். 2. தன்னுள் கூறிக்கொண்டது. வைரம்—பகை. கைம்மா—யானை. ஏலாத—தகாத. 3. கைகேயியிடம் இவள் கூறியது. நலம் கோட—நல்ல எண்ணம் மாற. கோளில் குலையும்—வருத்தத்தால் உன் வாழ்வு கெடும். 4. கேட்க வேண்டிய வரம் முதலாவது இது என்றாள். ஒன்று : இராமன் காட்டில் பதினான்கு ஆண்டு வாழ்வது.

"மற்றதுகாண் நின்புதல்வன் மாண்பின் பரதனிவன்
கொற்றவனா மென்றுங் குறையறவே—எற்றே
விரும்புவையேல் நின்வயமா வேந்தைநீ கொள்வாய்
அரும்புநகை தேவி! தெளிந்து." 5

பொங்கக் கதங்கொண்டாள் பொற்கொடியாள் கைகேசி
எங்கும் பறந்த விழையினங்கள்—மங்கும்
வணங்கொண்ட மேனியளாய் மன்னன் வருங்காற்
குணங்குன்றிக் கூறினளே கோள் 6

"சொற்குலையாத் தொன்மரபில் தோன்றினைநீ
மூன்னீந்தாய்
எற்கெனவே யென்கோ னிருவரங்கள்—இற்றையிவை
ஈவாய்நீ ஈத லிலையென்னில் நஞ்சுண்டே
போவேனான் கூற்றின் புரம். 7

"ஒன்றிதுகே ளுன்றனிராமன் தவத்தினனாய்
இன்றுவனஞ் சேர்வ னிரண்டேழு—குன்றாமல்
ஆண்டுவரை யாங்குறைவன் மற்றதுதா னென்பரதன்
ஈண்டொளிர்வன் கோனாய்ச் சிறந்து." 8

நங்கைகூற் றொவ்வொன்றும் நாராசம் போற்பாய
நங்கோனும் மீக்கலங்கி நாணுய்த்த—புங்கங்கள்
பாய்ந்தவுடற் சீயம்போற் பாரிற் படிந்தனனே
ஓய்ந்துமனம் முற்று மொசிந்து. 9

---

5. இரண்டாவது வரம் : அரும்பு நகை தேவி!—முறுவல் வாய்ந்தவளே! வயம்கொள்வாய் - உனக்குவயமாக்கிக் கொள் வாய். 6. கைகேசியின் கதம். பறந்த—பறந்தன. இழை இனங்கள்—ஆபரண வகைகள். குணங்குன்றி, கோள் கூறினள்: கொடிய சொல் கூறினாள். 7. குலையா—வீணாகாத கொடுத்த வாக்கு வீணாகாமல் காக்கும், எற்கு எனவே என் கோன்! ஈந்தாய். இற்றை—இன்று. கூற்று—யமன். 8. உன்றன் இராமன்—உனக்கு உயிரான இராமன் ஈண்டு கோனாய் ஒளிர்வான்—இங்கு அரசேற்று மேன்மையுடன் விளங்குவான். 9. இது கேட்டு மன்னன் அறிவிழந்து தரையில் விழுந்தான். நாராசம்—அம்பு. நாண் -வில்லின் நாண். ஓய்ந்து மனம்— செயல்படாத உள்ளம்.

மாழ்கலிலே மன்னன் வணங்கிப்பின், "மானிதுகேள்
வாழியநீ அன்ப னிராமனையென்—கேழில்
அமிழ்தினையிங் கேயிருக்க ஆணைபகர்" என்று
கவிழ்ந்தனனே கண்கள் சுழன்று. 10

## 4. நகர் நீத்தல்

பொழுதுபுலர்ந் தெங்கும் புவிபாற் படர்ந்து
வழுவிலதா மின்பம் வளர—அழுது
புலம்பினனே பூமான் புரக்கும் புவியில்
அலம்பலிலே யாழ்ந்து துவண்டு. 1

"இறையவனைக் காண வெனவேகுவைநீ" யென்று
நிறைவுறவே யுள்ளம் நினைப்பாள்—குறைகழலான்
செல்வ னிராமனைத் தேவி பணிக்கவவன்
ஒல்லை படர்ந்தானா லாங்கு. 2

அத்தன் றரைக்கிடந்தோ ராக்கமுங் கூறகிலன்
சித்தஞ் சிதையவிருந்தனனோ—வைத்தகண்
வாங்காது நின்றிடவும் மாற்றம் பகருமிவள்
ஓங்கத்தன் தீமை யொளிர்ந்து. 3

"அன்பனே! நின்தந்தை ஆர்வி லெனக்கொருகால்
அன்புட னீந்த வரமிரண்டை—என்மனமோ [றான்
இன்றுகொள வேண்டவிவன், "ஒன்றீவன் மண்ணென்
ஒன்றிடவென் னுள்ளத்தி னூறு. 4

10. மன்னன் தேவியை வேண்டிக் கொண்டது. மான்!—மான் போல் அழகியவளே! மாழ்கல்—மயக்கம்.

1. வேந்தன் பொழுது விடிந்தும் புலம்பிக் கொண்டிருந்தான். பூமான்—அரசன், அலம்பல்—துன்பம். 2. கைகேயி இராமனை வருமாறு ஏவ, அவன் ஆங்குவந்தான். 3. இராமன் கண்ட காட்சி. ஆக்கம்—ஆசி. தன் தீமை ஒளிர்ந்து ஓங்க, இவள் பகரும் : கூறினாள். மாற்றம்—சொல், வன்சொல், 4. கைகேசி கூறியது : ஒன்று—வரங்களில் ஒன்று : மண் ஈவன் என்றான் : வெறுப்புடன் கூறுவது. இராமன் கானகம் செல்லுவதே தனக்கு இன்பம் தரும் என்பது தோன்ற. ஊறு—துன்பம்.

"இன்றே தவவுருவி லேழிரண்டாண் டுகள்நீ
குன்றின் திரள்மார்பா. தொல்கானம்—சென்றாங்கு
வாழுவையால் பாரிதற்கு மன்னாவான் நின்தம்பி
பாழித்தோள் வீரன் பரித்து." 5

"நல்லாய்நீ எற்கன்னை நானேற்பன் நின்னாணை
எல்லேயிம் மன்ன னியம்புவதென்?—தொல்கானம்
இப்போதே மேகுவனான்" என்றனனே காகுத்தன்
தப்பாமல் மூரல் தளிர்த்து. 6

"என்னுயிரே!" என்றழுதான் கோமானோ ஏதொன்றும்
பன்னும் நினைவிலனாய்ப் பாரினிலே—பின்னும்
படிந்தனனே நோக்கிலன் பக்கத்தும் கண்ணீர்
வடிந்ததுவே வாரிதியின் மிக்கு. 7

படிவிரும்பாச் செல்வன் பரிவுடையா ளன்னை
விடைவிரும்பி யோதிப் பிரிவை— அடிபணியக்
கன்று பிரிந்த கறவையெனக் கூவியவள்
நன்று நவின்றனளே வாழ்த்து. 8

இளகியுளம் மைதிலியு மெண்ணில் நலத்த
இளவலும் "நா மும்மைப் பிரியோம்—அளிவலனே!
எம்முடனே ஏகுவைநீ" என்றிறைஞ்ச ஓமென்றான்
செம்மனத்தான் சிந்தை சிறந்து. 9

5. கைகேயி கூறியது. குன்றின் திரள் மார்பா—குன்றிலும் திண்மை வாய்ந்த மார்புடையவனே! பாழித் தோள்—திண்ணிய தோள்கள். 6. இராமன், அவளது ஆணையை ஏற்றுக்கொண்டான். எல்லே...இயம்புவது என்? உன் ஆணை ஒன்றே போதாதோ? மூரல் தளிர்த்து—முறுவல் தழைத்து, மிகுந்து. 7 தசரதன் ஏதும் கூற இயலவில்லை. பன்னும்—கூறும். வாரிதி கடல். வாரிதியில் மிக்கு வடிந்தது. 8. படி—பூமி, அரசாள்வது. கோசலையின் வருத்தம். வாழ்த்து நவின்றனள்—வாயார வாழ்த்தினாள். 9. இளவல்—தம்பி, லக்ஷ்மணன். ஓம் என்றான்—ஆகுக என்றான் செம்மனத்தான்—சிறந்த மனமுடையவன்.

விடைபகர விம்மூவர் வேந்தனிடஞ் சார்ந்தார்
அடையவொரு சொல்லு மவனோ—திடமுறவே
பேசகிலன் வாடிப் பெரிது மிவர்படர்ந்தார்
பாசமெலாம் மன்னன்பால் வைத்து. 10

## 5. சித்திரகூடம்

தூமனத்த செல்வச் சுமித்திரையுங் கோசலையும்
மாமனத்த சான்றோன் வசிட்டனுடன் -சேமமென
ஓதினரே "ஞாலத் துயிராவீர்! மீள்விரிவண்
பேதிலவா மின்படரப் பெற்று." 1

நகரெங்கு மல்லுற்று நம்பியெனுங் கொற்றப்
புகரொன்று தான்பிரியப் போகம்—மிகநைந்தே
ஆணொடுபெண் பிள்ளைகளு மாற்றவொணாத்
கோணினரே கோடா மனம். [துன்பத்திற் 2

தெருவினிலே யூர்தரவும் செம்மலி ராமன்
பரிவினிலே மாந்தரெலாம், "பாரில்—விரிதருமோர்
கற்பகமே! எம்முயிரே! கான்வேண்டா! மீளுவைநீ
பொற்பகமே" என்றார் புரிந்து. 3

பட்டொடுபூண் தாமகற்றிப் பாங்கின் மரவுரியே
திட்டமெனத் தாமுடுத்துத் தேசெங்கும்—விட்டொளிரக்
கோமகன்றன் சேயிருவர் கோகனகை போலொளிரும்
பூவையுடன் நீத்தார் புரம். 4

---

10. வேந்தன் ஒன்றும் பேச இயலவில்லை. இவர்களது கலக்கம்.

1. சுமித்திரை, கோசலை, வசிட்டன் இவர் மங்கலம் பகர்ந்து விடையளித்தனர். இவண்—இங்கு. பேதிலவாம் இன்பு—குறையாமல் கொள்ளும் இன்பம். 2. நகர மாந்தர் கொண்ட துன்பம். போகம்—களிப்பு. கொற்றப் புகர்: இராமன். கோடாத—மாறாத (இது வரையில் இன்பத்தால்). கோணினர்—மன வேறுபாடு கொண்டனர். 3. இவர்களது வேண்டுகோள். பொற்பு அகம்—அழகு வாய்ந்த இந்நகரம். 4. இராமனும் தம்பியும் மரவுரி உடுத்து நகரை விட்டு நீங்கினர். கோகனகை—லக்ஷ்மி.

கங்கைக் கரையினிலே கண்டிவரைக் கானவர்தஞ்
சிங்கம் குகப்பேரான் கூறினனே—அங்கை
சிரத்தமைத், "தென்னுடனே சேர்ந்துறைவீ ரிங்கு
வருத்தமற வாழ்வீர் மகிழ்ந்து." 5

"நாமோ தவம்பூண்டோம் நாளை விடியலிலே
சேம மெனக்கானஞ் சேருவமே—வாம
நதியிதனை நாங்கடக்க நாவாய்நல்" கென்றான்
மதிவதனன் தாசரதி தான். 6

பாகிரதி தாண்டிப் பரத்வாச மெய்யன்பால்
ஏகியிவ ரேத்த, இயம்புமவன்—"யோகியர்சேர்
சித்திரகூ டச்சிலம்பு சேணுயரக் காண்பீரால்
சித்தமுறச் சேர்ந்துறைவீ ராங்கு" 7

மயக்குவளம் வாய்ந்து வரையின்றி மண்டித்
துயக்கறுத்த தூயரினந் தோய—உயக்கமெலாம்
வாட்டும் மலையதனில் வாழ இராமன்தன்
நாட்டம் நவின்றனனே யாய்ந்து. 8

இளவல் மலையதனில் ஏந்தெழிலார் சேர்வொன்
றொளிர வனைந்தனனே வள்ளல்—களபமொடு
மங்கை யிளம்பிடியும் வாழ்ந்தா ரதுதன்னில்
அங்கமலை யச்சுதனோ டொப்பு. 9

---

5. கங்கைக் கரையில் குகனின் வேண்டுகோள். கானவர்—வேடர். 6. இராமனது விருப்பம். வாம-இயற்கை வளம் வாய்ந்து அழகான. நாவாய்—ஓடம். 7. பாகிரதி—கங்கை. பரத்வாச முனிவன் கூறியது. யோகியர்-முனிவர். சிலம்பு—மலை. சேண்—ஆகாயம். 8. இந்தத் தலத்தின் சிறப்பு. மயக்கு வளம்—மயக்குமாறு எழில். துயக்கு—ஆசை; சோர்வு. தூயர்—முனிவர். உயக்கம்—வருத்தம், வாட்டம். இராமனது விருப்பம். நாட்டம்-நோக்கு, குறிப்பு, விருப்பம். 9. இலக்குமணன் குடில் அமைத்தான். சேர்வு-மனை; வாழுமிடம். களபம்-ஆண் யானை (இராமன்). பிடி-பெண் யானை (பிராட்டி). அங்கமலை—லக்ஷ்மி.

நொடிதோறு மோங்க நுவலரிய நோன்பு
துடியிடையோ டேற்க விராமன்—முடிவிலதோ
ரின்பத் திளவ லிவர்க்காகுந் தொண்டினையே
தன்பற் றெனச்செய்தா னேற்று. 10

## 6. தயரதன் வான்படர்தல்

உயிராகும் மைந்த னகல உடலோ
வயமேது மின்றிமிக வாடி—மயலே
பிணிக்கப்பார் மன்னன் பிதற்றும்: "இராமா!
அணைக்கநீ யேகுவையோ?" என்று. 1

நாளிரண் டில் மன் னுடல் நைந்து வதனத்தில்
வாளொடுங்க மையிரவுப் போதினிலே—கோளிலதாம்
விண்பாலே வாழவென மேவினனே தேவியர்தாம்
மண்பாலே தாழ மலைந்து. 2

தைலத் தடாவினிலே தாரணியின் காவலன்றன்
நையு முடலதனை நட்டமைச்சர்—செய்வனதாம்
ஆராய்ந் தனுப்பினரே தூது பரதனைநீ
வாராய் வளநகரே யென்று. 3

கடுகப் படர்ந்தனனே காணவெனக் கோனைப்
படியில் நலத்த பரதன்—கடிநகரோ
சோதி சுணக்கமுறச் சோர்வுற்றான் நேர்ந்ததுதான்
யாது முணரா தயர்த்து. 4

---

10. தவத்தினர் வாழும் வாழ்வில் தோய்ந்து மூவரும் இன்பமுடன் வாழ்ந்தனர். துடியிடை: சீதை. இளவல், இராமன், சீதை—இவர்க்காகுந் தொண்டு இயக்கினான். பற்று—விருப்பம்.

1. வேந்தன் துயரம். வயம்—வலிமை. மயல்—மயக்கம். 2. வேந்தன் விண் படர்ந்தான். வதனம்—முகம். வாள்—ஒளி. மை இரவு—நடு இரவு. 3. அமைச்சர் செய்தது. அமைச்சர் காவலன்றன் உடலை நட்டு, ஆய்ந்து, தூது அனுப்பினர். தூது—செய்தி. 4. படி—ஒப்பு. பரதன் விரைந்து வந்தான். கடுக—விரைந்து. படியில்—ஒப்பில்லாத. சுணக்கம்—வாட்டம்.

அரண்மனையிற் சார்ந்துதனக் காருயிராந் தந்தை
மரணமடைந் தானென்று கேட்டுக்—கரணமெலாம்
ஓய்ந்து தனைமறந்து தாயின் மடியினிலே
சாய்ந்து துவளுமிவன் சோர்ந்து. 5

தந்தை மறைந்ததுதான் தாயாலே யென்றோர்ந்து
நொந்து நுவன்றனனே நிந்தையுரை:—"அந்தோநீ
எற்கே யமனானாய்" என்றிதுவே நைந்துருகிச்
சொற்றா னழுன்றே சுழன்று. 6

கதறியிவன் கோசலையைக் கண்டு பகரும்:
இதமடர எற்கருளு மன்னாய்!—அதமிதற்குக்
காரணமோ நானலனே காயுந் துயரிதற்கு
வாரணமோ காணகிலேன் மற்று. 7

"எங்கோ னிராமனை நா னெங்ங னகன்றிருப்பன்?
இங்கெற் கிருப்பில்லை" என்றோதி—"அங்கவ்
வடவியிலென் னாருயிரை நாடி யழைப்பேன்
புடவியிதைக் காக்கவெனப் போந்து." 8

அழலுழியே யுய்த்தவ் வதிப னுடலைக்
கழறிமிகத் தம்பியுடன் கர்மம்—வழுவிலதாய்ச்
செய்தனனாற் செல்வப் பரதன் விதிவகையே
செய்வவெலாஞ் சோர்வின்றித் தேர்ந்து. 9

---

5. தந்தையின் மரணத்தை யறிந்து கலங்கினான் பரதன். கரணம்—இந்திரியங்கள். 6. மரணத்திற்குக் காரணம் தனது தாயென்றறிந்து அவளைக் கடிந்தான். சொற்றான்—சொன்னான். சுழன்று—மயங்கி. 7. கோசலையிடம் இவன் கூறியது. இதம் அடர— நன்மை படர, அன்பே வளர. அதம் இதற்கு—தந்தை மாய்ந்ததற்கு. வாரணம்—நிவாரணம்; தடை. 8. மேலுங் கூறியது: அங்கு அவ்வடவியில்(அந்தக் கானகத்தில்). போந்து புடவி (பூமி) இதைக் காக்க என அழைப்பேன். 9. மன்னனுக்கான ஈமச் சடங்கு செய்தது. மிகக் கழறி கர்மம் வழுவிலதாய் செய்தான்; தேர்ந்து சோர்வு இன்றிச் செய்தான்.

அவையதனைக் கூட்டி யமைச்சரெலாம், "அன்பா!
"புவியிறைவன் நீயென்று போற்றச்—செவியிரண்டும்
பொத்தியவ னார்த்தான்: "புரப்பவனோ நானல்லேன்
வித்தகனா மென்முன்னோன்" என்று. 10

## 7. சித்திரகூடஞ் சேர்த்தல்

சடையும் மரவுரியுந் தான்வேய்ந்து முன்னே
படரப் பரதன் தமைய—னடலரியின்
தாள்பணிய மூத்தோருந் தானையுடன் பின்தொடர்ந்[தார்
கோளடருங் கானங் குறித்து. 1

படரும் பரதனுடன் பார்நெகிழத் தானை
இடியின் முழக்கி யியங்கத்—"திடமிவனோ
முன்னோனைக் கொன்று முடிசூடப் போவானோ?"
என்றார்த்தான் வேடர்க் கிறை. 2

தன்னினத்தார் தம்முடனே சார்ந்து பரதனிடம்,
"என்னிதுநீ இக்கான மேகுவதோ—துன்னப்
பகைவளர்த்தே யாங்கொல் படியிதனை யாள
இகலொழிப்பாய்" என்றான் குகன். 3

சோக வடிவாகிச் சோரும் பரதன்தன்
ஆகந் துரும்பா யலந்துருகப்—போகமெதுங்
காணகிலன் கண்ணீர் கலுழியெழ நின்றனனே
நாணிமிக வாடி நலிந்து. 4

---

10. அமைச்சர் அவையைக் கூட்டினர். பரதன் சபையிற் கூறியது. வித்தகன்—அறிஞன், மேலோன்.

1. தவக் கோலத்தில் பரதன் சென்றான். தமையன் அடலரி—தமையனாகிய வலிய சிங்கம். கோள் வளரும்—துன்பமே மேன்மேலெனக் காணக்கூடிய. 2. குகன் கொண்ட கவலை. இடியில் முழக்கி—இடியினுங் கொடிய ஓசை எழும்ப, 3. பரதனிடம் இவன் கூறியது. பகை துன்ன(அடர) வளர்த்தே யாம் கொல்: அடரும் பகையாலோ? இகல்—பகை. 4. பரதனின் நிலை. ஆகம்—உடல். அலந்து—சிதைந்து. கலுழி—வெள்ளம். நலிந்து—துன்பமுற்று. சோக வடிவாகி—சோகம் வடிவாக வந்தது போல். போகம்—இன்பம், மகிழ்ச்சி.

"சேமமோ என்னையன்?" என்ற பரதற்குச்
சேமம் பகர்ந்து, "திருவளரும்—வாம
வடிவனையாம் காண்போம் வருகவென"க் கூறும்
படியிலனாம் பண்பன் குகன். 5

பரத்துவாசப் பண்ணவன்தான் தாழ்ந்து பரதன்
கருத்தோத அம்முனிவன் வாழ்த்தி—வருத்தமற [பேன்
நின்முன்னோன் வாழ்கின்றான் நின்பரிவை என்னென்
பன்னவரி தென்றான் பகுத்து." 6

சித்திர கூடச் சிலம்பின்முன் கைகுவித்துச்
சித்தஞ் செழிப்பத் திரண்டடரப்—பத்தி
தலைவனி ராமன்பாற் சார்ந்தான் பரதன்
உலைவினுக் கௌடதமே யென்று. 7

அருளே யுருவாந்தன் னாயிழையோ டுற்ற
குரிசி லிராமன்றாள் சென்னி—விரவப்
பரதன் படிந்து பகர்ந்தனனே: "அண்ணா!
உரியே னுனக்கேயான் வாய்ந்து!" 8

ஐயன்ற னாகத் தணைத்தப் பரதனைத்தன்
மெய்யே சிலிர்ப்ப விளம்பினனே!—"தெய்வமெனப்
போந்தாய் படரும் புரிவினிலே என்னுயிரே!
ஏந்தால்! வருவாய்நீ" யென்று. 9

---

5. குகன் சேமம் பகர்ந்தது. பரதனைச் சித்திரகூடத்திற்கு அழைத்துப் போவதாகக் கூறினான். ஐயன்—மூத்தோன். படி—ஒப்பு. 6. பரத்துவாச முனிவன் பரதனைப் பாராட்டினான். பன்ன அரிது—வாயால் எடுத்துக் கூற இயலாது. 6. சிலம்பு—மலை. சித்தம் செழிப்ப, பத்தி திரண்டு அடர. சார்ந்தான். உலைவு—துன்பம். 8. பிராட்டியுடன் வீற்றிருந்த இராமனைப் பரதன் வணங்கினான் அருளே உருவாம்—அருளாலே சிறந்த. ஆயிழை—பெண்; சீதை. குரிசில்—சிறந்தோன். விரவ—படிய. 9. இராமன் பரதனை வரவேற்றான். ஆகம்—மார்பு. படரும்—வளரும். புரிவு—அன்பு. ஏந்தால்!—சிறந்தோனே!

"என்னே தவக்கோல மிஃதென்?" றிராகவனும்,
"மன்னன் நமதையன் மாழ்கற்கா்—இன்னல்
இலனாகி வாழுங்கொ லெற்குரைப்பாய்" என்றான்
தலனொன்றே நாடி மனத்து. 10

## 8. பரதன் விண்ணப்பம்

வாய்குழறி மாழ்கிப் பரதன், "மகிக்கதிடன்
சேய்பிரிந்த தாயனையான் சேண்படர்ந்தான்—மோய்
குற்றமிது கூற்றின் கொடியளிவள் கூறுவதென்? [புரிந்த
தற்றவனே!" என்றனனே நைந்து. 1

"ஓவென் றலற்றி, "உயிராய வெந்தைதனை
ஆவிழந்தேன் ஆரென்னை யன்பினிலே—வாவென்
றழைப்பார்?" எனவுருகிக் கூவி யரற்றும்
குழைவி லிராமன் குலைந்து. 2

தம்பியொடுந் தாரமொடுந் தாபத் தழுந்தியிவன்
அம்புதனி லாடித்தன் னத்தற்குச்—செம்மையுறச்
செய்வதனைத் தானியக்கிச் செம்மல் பரதனுடன்
மெய்குளிரப் பேசுமிவன் பெட்பு. 3

நேயமெழ வாங்கடர்ந்தார் நேடி யமைச்சரெலாம்
தாயரொடு சான்றோன் வசிட்டனுமே—ஆய
பரிவடரக் கண்டிவனைப், "பாரீரோ கோலம்
அரிதிதுவே!" என்றா ரயர்த்து. 4

---

*10. இராமன் வினவியது: என்னே! தவக் கோலம் இஃது என்? மன்னன் இன்னலின்றி வாழ்கின்றானா? மாழ்கல்—மனக் கலக்கம்.*

*1. பரதன் கூறியது. சேண்—வானுலகு. மோய்—தாய். கூற்றினும் கொடியள்— 2. ஆ! இழந்தேன் எனப் பிரிக்க. குழைவு—வாட்டம். குலைந்து—வருந்தி. 3. நீராடித் தகப்பனுக்குச் செய்ய வேண்டியதை இராமன் செய்தான். அம்பு—தண்ணீர். பெட்பு—அன்பு. 4. நேடி—இருக்குமிடத்தைத் தேடி. தாயர்—கோசலை, சுமித்திரை, கைகேயி. இது கோலம் அரிது—கண்டு பொறுத்தற்கு இயலாதது. அரசக் கோலம், காண விரும்பிய நாம் தவக் கோலம் கண்டு வருந்துகிறோம்.*

அன்னை தமையனைவணங்கி யாசா னடிபரவி
மன்னு மிராமன் றன் முன்னமர்ந்து—துன்னும்
அமைச்சரொடு தூயோன் பரதனிது சொல்லும்:
"எமைச்சிறிது கேட்பாய்நீ" என்று. 5

"அரசென்னே மாண்டான் அடியேனுக் காகா
அரசிதனை யேற்பாய் அறவோர்க்—குரியதிது
நீக்கி நியமத்தில் நீயேற்றுப் பாரிதனைக்
காக்க வருவாய் களித்து." 6

"அத்தன் விடுத்ததனி யாணை மறுக்ககிலேன்
அத்தா! அரசேற்க நீமீள்வாய்—அத்தற்
கருந்தனங்காண்" இஃதென் றிராம னுரைத்தான்
அருந்தகையன் தம்பிதனை யாங்கு. 7

உணர்த்தும் வசிட்டனிது: "உத்தமநின் முன்னோர்
புணர்த்த வகையிதுவே பொன்போல்—திணர்த்த
நிலமிதனை மூத்தோன் நியமத்திற் காக்கும்
குலமிதுகாண் கொள்வாய் குறிப்பு." 8

மற்றவரும் வாய்மொழிந்தார்: "மன்ன னுரைதனினும்
மற்றவன் தன் கண்ணென்றே வாரமுடன்—எற்றே
புரந்த புவியைப் புரப்பதுவே யேற்பாம்
பரந்த பரிவுடையோய்!" என்று. 9

---

5. அமைச்சரிடையே பரதன் இராமனிடம் கூறியது. துன்னும்—அடர்ந்துள்ள, 6. பரதனின் வேண்டுகோள். அறவோர்க்கு உரிய இது. நீக்கி—இந்தத் தவ வேடத்தை நீக்கி. நியமத்தில்—முறைப்படி. 7. இராமன் கூறியது. அரசனது ஆணையை மீற முடியாதென்று. இந்த அரசு அத்தனுக்கு அருந்தனம். 8. வசிட்டன் உணர்த்தியது: மூத்தோனே அரசேற்று ஆள்வது இக் குலத்தின் வழக்கம். புணர்த்த—இசைந்து ஏற்ற. திணர்த்த—அடர்ந்த, செறிந்த. 9. மற்றையோர் கூறியது. வாரம்—அன்பு. புரந்த—காத்த. பரந்த பரிவுடையோய்—தகப்பனிடம் பேரன்பு வாய்ந்த நீ.

"அத்த னுயிர்வாழ்ந்த வக்காலத் தாணையிதே
சித்த முறக்கொண்டேன் தேறேனான்—மெத்தநெ
வேறெதுவு மிவ்வாழ்வே மேலாகும்" என்றொன்றே
கூறினனாற் சீராமன் கூர்ந்து. 10

## 9. பாதுகா பட்டாபிஷேகம்

தருப்பை தமையடர்த்துத் தாரணியில், "அன்பா!
விருப்ப மிதனை யிகழின்—தரைப்படுப்பன்
ஏலே னுணவெதுவும்" என்றான் பரதன்தன்
சீலன் தமையன்பாற் சார்ந்து. 1

"தம்பீ! தகுமிதுவோ? தார்சூடுங் கத்திரியர்
வம்பே யிதுவென்பர் வல்லவனே!—தெம்புறுவை
என்முன் வருவாயே" என்றவற்குக் கூறினனால்
அன்பி னிராம னணைத்து. 2

"ஆண்டு பதினான்கும் யான்கழித்திக் கானகத்தில்
மீண்டு வளநகர்க்கு மேவுவனே—ஆண்டகையோய்!
இவ்விணைய பாதுகையை ஏற்றேநீ யென்பேரால்
செவ்வியுறக் காப்பாய் நிலம். 3

"என்னுரைகேள் ஆண்டுகளோ ரேழிரண்டுவாழ்ந்தி
பின்னை நீ பிற்றைநாள் வாராயேல்—என்னுடலம் [ங்கே
அங்கிதனக் கா" மென்றா னன்பன் பரதன்தன்
செங்கைசிரத் தின்மேலே சேர்த்து. 4

---

10. இராமன் கூறியது. தந்தை நேரில் விடுத்த ஆணையே சிறந்ததெனக் கொள்வேன். வேறு எதுவும் மேலது எனத் தேறேன்.

1. பரதன் கூறியது: "நீ இணங்கும் வரையில் பட்டினி கிடப்பேன்" 2. இராமன் கூறியது. கத்திரியர் இது தகாது என்பர். வம்பு-புதுமை; வீம்பு. தெம்பு உறுவை—மன வலிமை கொள்வாய். 3, இராமன் கூறிய உறுதி. ஆண்டகையோய்! சிறந்தவனே! வீரனே! 4. பரதன் கூறியது: பதினான்கு ஆண்டு கழிந்தவுடன் நீ மீளவில்லையெனில் நான் தீயில் விழுந்து இறப்பேன். அங்கி—நெருப்பு. செங்கை சிரத்தின்மேல் சேர்த்து... என்றான்.

ஏந்த லிராம னிங்ஙன் விடைநல்கச்
சாந்தந் தழைக்கப் பரதனுமோர்—கூர்ந்த
புரிவினிலே அண்ணனையும் பொன்னியையுஞ் சுற்றி
அரிதெனவே வந்தான் வலம். 5

தன்முன்னோன் பாதுகையைத் தன்சிரத் தேற்றிவனோ
பொன்னெனவே பூண்டு புறப்பட்டான்—பொன்ந
சீமா னிராமன் திருநாமந் தானிசைத் [கர்க்குச்
தாமோ தருந்தனமாக் கொண்டு. 6

நந்திக் கிராமத்தில் நம்பியின் பாதுகையை
விந்த மெனவைத்து வீசுபுகர்ச்—செந்தாதுச்
சிங்கா தனத்தினிலே சேர்த்திவனோ கைதொழுதான்
மங்காப் பரிவடர வாய்ந்து. 7

வெண்கவிகை மேலுயர்த்து வெண்சா மரைவீசிக்
கண்ணெனவே காத்தந்தப் பாதுகையை அண்ணல்
பரதன் பணிந்தத னாணையிலே பாரை
அரசு பரித்தான் பரிந்து. 8

நாளும் மிழற்றியி ராமன்றன் நாமமதே
வாள்பெய் வதனத்தா னிந்நம்பி—''நாளேல்
எதுவென்றோ என்கோ னிவண்மீள்வ' தென்றே
வதிந்தனனே யுள்ளம் மலைந்து. 9

---

5. தமையனையும் சீதையையும் வலம் வந்து பரதன் பாதுகையை ஏற்று மீண்டான். பரிவு—அன்பு. பொன்னி—லக்ஷ்மி போன்ற சீதை. 6. பாதுகைகளைத் தன் சிரத்தில் பொன் போல் பூண்டான். இவன் ஏற்றது: ''அடிசூடும் அரசு;'': ஆம் ஓர் அரும் தனமா கொண்டு. 7. நந்திக் கிராமத்திற் பாதுகா பட்டாபிஷேகம். செந்தாது-பொன். 8. வெண் கவிகை-வெண்கொற்றக் குடை. அதன் (பாதுகையிணையின்) ஆணையிலே பாரை அரசு பரித்தான். பரதன் அரசு பரித்தான் (தாங்கினான்). 9. இராமன் மீள்வதை எதிர் நோக்கி ஆவலுடன் வாழ்ந்து வந்தான், பரதன், இராமனது நாமம் தானும் நவின்று. வாள்—ஒளி. ஏல்: அசை.

தாபதனாய்ச் சென்னி சடைபுனைந்து வற்கலையே
ஆவதுதா னென்றுடுத்துத் தற்காகுந்—தாபமெலாந்
தீருவது தானென்றோ என்றிவனோ தேறகிலன்
நீரருவக் கண்கள் நிறைந்து. 10

---

10. பரதனின் தாபம். தாபதன்—தவஞ் செய்வோன். வற்கலை—மரவுரி. ஆவது—தனக்கு ஏற்றது. தற்கு—தனக்கு. தேறகிலன்—தேர்ந்து மனம் திண்ணமுறப் பெறவில்லை. கண்கள் நீர் நிறைந்து அருவ—கண்கள் நீரைச் சொரிய.

# ஆரணிய காண்டம்

## 1. பஞ்சவடி

சித்திர கூடச் சிலம்பதனை நீத்துப்பின்
மைத்தடர் கானத்திற் வாழ்வதுவே—மெத்ததெனக்
காகுத்தன் மோனர் கழல்வணங்கித் தான்படர்ந்தான்
போகத்துக் கென்றே புரிந்து. 1

உதிக்கும் முழுமதிபோ லொள்பெய் திராமன்
மதர்த்துப் படர்தரலும் மன்னப்—பதித்ததனைச்
செவ்வியிலே சிந்தை தெருளர் முனிவரெலாம்
செவ்வனமே வாழ்த்தினராற் சேர்ந்து. 2

காடுறையுந் தாபதரோ காகுத்தன் முன்னடர்ந்து
பீடடர்க்கும் வாளரக்கர் பெய்துவரும்—பாடதனைத்
தாமோதிக், "காப்பாய் சர"ரென்றார் சாற்றினனே
சீமானும், "செய்வனியா" னென்று. 3

வெற்பனைய மாவுருவில் வெந்தழலிற் கண்சுழலக்
கற்புழையாம் வாயால் கனைத்தருகி—லுற்ற
விராத நிசிசரனை வீய்த்தனனே வீரன்
இராம னயில்வாளை யேற்று. 4

---

1. ஏகாந்தமாகச் சித்திர கூடத்தில் வாழ முடியாதென இராமன், அதை நீத்துக் காட்டில் படர்ந்தான்: மைத்து அடர்—மரங்களால் இருள் அடர்ந்த, மோனர்—முனிவர். புரிந்து—விரும்பி. முனிவர்களை வணங்குவதே போகம் என விரும்பி. 2. இராமனது செவ்வியைக் கண்டு முனிவர், வியந்து வாழ்த்தினர். மதர்த்து—களித்து. செவ்வனம்—செவ்வையாக, நன்கு. 3. இராமனிடம் முனிவர்கள் வேண்டிக் கொண்டது. பீடு—துன்பம். பாடு—கேடு. சீமான், யான் செய்வன் என்று சாற்றினன். 4. விராதன் வருகை. வெற்பு—மலை. கற்புழை—மலைக்குகை. நிசிசரன்—அரக்கன். அயில்—கூர்மையான.

சரபங்க மாமுனிவன் தாள்வணங்கி யன்னான்
இறபந்தம் வானேறக் கண்டே—அருமந்த
வாய்ப்பென்றி ராமன்றன் வாள்பரப்பிச் சென்றனனே
காப்பொன்றக் கார்முகங்கைக் கொண்டு. 5

குறுமுனிவன் தாளிற் குனிந்த விராமன்
உறுமன்பி லம்மோனன் றன்பால்—திறலடரும்
வில்லேற்று மீண்டும் படர்ந்தனனே வீயாத
மல்லேற்ற தோளான் வனம். 6

ஆங்காங் கிராம னருந்தவத்தோ ரோடுறைந்து
பாங்காகத் தம்பியொடும் பாவையொடும்—ஓங்கும்
மகிழ்வினிலே வாழ்ந்தான் மனந்தன்னை நாளும்
நெகிழ்விலதாம் நேமத்து நட்டு. 7

கங்கக் கணக்கோன் சடாயுவைக் கண்டிவனோ,
பொங்கும் புரிவே மனத்தொளிர:—"எங்கள்
தகப்பனினும் மேலவனே! தங்குகநீ எம்மோ
டுகப்பினிலே" என்றா னுகந்து.

வருபுனலாங் கோதா வரிக்கரையிற் சோலை
பரவியடர் பஞ்சவடி தன்னிற்—பரிவன்
இலக்குமணன் நன்கமைத்த சேர்வி லிராமன்
குலக்கொடியோ டுற்றான் குழைந்து. 9

5. சரபங்க முனிவன் வானேறக் கண்டான் இராமன். பந்தம் இற—வாழ்க்கைத் தளை நீங்க. அருமந்த—மிகச்சிறந்த. வாள்—திருமேனியின் ஒளி. காப்பு ஒன்ற—காக்கவேணும் என்பது மனத்திற் படிய. 6. அகத்தியனிடம் வில்லும் கணைகளும் பெற்றான். குறுமுனிவன் அகத்தியன். மல் திண்மை. வீயாத—அழியாத. 7. ஆங்காங்கு முனிவருடன் தங்கி வாழ்ந்தான் இராமன். நேமம் வாழும் முறை (தவத்தினனாய்). 8. சடாயுவைக் கண்டு, தன்னுடன் வாழுமாறு வேண்டினான், இராமன். கங்கம்—கழுகு. 9 கோதாவரி நதிக் கரையில் பஞ்சவடியில் வாழ்வதற்கு விரும்பினான். வருபுனல்—ஆறு. பரிவன்—பரிவுதானே இயல்பாக வாய்ந்த.

வைகி வரநதியின் பாரத்தில் வாரமுடன்
துய்ய மனத்தினனாய்ச் சீராமன்—நொய்யிடையாள்
தன்னோடும் நன்மனத்த தம்பியொடும் வாழ்ந்தனனே,
"என்னேயிப் பேரின்பம்!" என்று. 10

## 2. சூர்ப்பணகை

ஒருவைக லாங்குற்றா னோரரக்கி முன்னே
பொருவிலனாங் காளையி ராமன்—விரிகதிரில்
மன்னவிவள் கண்டு மனத்து ளுறக்கொண்டாள்.
"என்னிவனோ எற்காவ" னென்று. 1

அல்லுருவுஞ் செய்மயிரு மள்ளு மனல்விழியும்
அல்லடருஞ் சிந்தை யவைமறைத்து—மெல்லிடை
பூங்குழலும் மான்விழியும் பூத்த வளநகையும் [யும்
தாங்குலவக் கொண்டாள் தழைத்து. 2

ஏந்த லிராமனுழி யிஃதோதும்: "நின்பாலே
போந்த வெனைநீ புணர்வாயால்—ஏந்தியதோர்
சீர்த்தி யிராவணற்குத் தங்கை திறனுடையோய்!
சூர்ப்ப ணகையாவன் நான்." 3

"என்மனையா ளிங்குற்றா ளென்னா லுனக்காகுங்
கன்மமிலை காண்பாய் கருத்துறநீ—என்வன்பன்
தம்பியிடஞ் சார்வதுதான் சாலு'மென் றானிவனோ
செம்முறவே மூரல் செழித்து. 4

---

10. பெருகு மின்பமுடன் அங்கு இராமன் வாழ்ந்து வந்தான். வைகி—தங்கி. பாரம்—கரை. நொய் இடையாள்—மெலிந்த இடையுடைய சீதை.

1. ஒரு நாள் சூர்ப்பணகை இராமனைக் கண்டு, அவன் தனக்கே யாவன் எனக் கருதினாள். பொரு—ஒப்பு. 2. தனது இயற்கை உருவை மறைத்து, அழகுடன் நின்றாள். அல் உரு—கருப்பான வடிவம். அள்ளும் அனல் விழி—அடர்ந்த தீபோற் சிவந்த கண். குலவ—பொருந்த. 3. இராமனிடம் இவள் கூறியது. 4. இராமன் மொழிந்தது. சாலும்—ஏற்றதாம். மூரல் செழித்து செம்முற—புன்முறுவல் அடர்ந்து அழகாக விளங்க. கன்மம்- செய்ய வேண்டியது (என்னால் ஆவது.)

இலக்குமணன் பாலவளோ ஏகி விரும்பும்
இலக்கெதுவுங் கூடா தியம்பும்:—"மலக்கமிதென்
காளாய்! எனைநீ கணப்போதி லேற்பாயே
மீளேன் வெறிதே யினி." 5

பின்னுமிவள் பேசினளால் "பேறாமென் காதற்கு
நின்மனையாள் மாறாகும் நீயிதுகேள்—நின்னெதிரே
இப்பெண்ணை யான்புசித்து நின்னுடனே யின்புறுவன்
ஒப்பில்லாப் போகத்தி லுற்று." 6

அறைந்திங்ஙன் தன்னுருவி லவ்வரக்கி பாய
விரைந்தங்கே தம்பி விறலான்—மிறையின்றி
வாள்கொண் டவள்செவியும் மூக்கும் வகிர்ந்தனனே
மாள்வின்றி வாழ வவள். 7

குருதி குமிழியெழக் கூக்குர லி லன்னாள்
கரனாந் தலைவற்குச் சாற்றும்:—"செருவல்லார்
இவ்வனங்காண் வாழ்வர் மனித ரிவரிருவர்
இவ்வணமே செய்தா ரா லெற்கு. 8

"கட்டழக ரிவ்விருவர் காரிகையோ டிங்குற்றார்
இட்டமுற விவ்வனத்தில் வாழ்கின்றார்—பெட்புறவே
இவ்வணங்கை யான்கவர்வா னேகியதாற் காண்பாய்நீ
இவ்வணமே போந்தேனா லிங்கு. 9

---

5. இலக்குமணனிடம் சென்று இவள் மீண்டு, தன்னை அணையும்படி இராமனை வற்புறுத்தினாள். இலக்கு - நாடியது. மலக்கம்—கலக்கம். வெறிதே - பயனேதுமின்றி. 6. சீதையைத் தின்று இராமனை அணைப்பதாக இவள் கூறினாள். காதற்கு மாறு நின் மனையாள்; பகையாகப் பயன்படாமல் தடுப்பது நின்மனையாள். 7. தன்னுடைய இயல்பான உருவுடன் சீதையின்மேல் இவள் பாய்ந்தாள்: அறைந்து—கூறி. விறலான்—வலியுடையவன், மிறை—வருத்தம். 8. இவள் கரனிடம் முறையிட்டாள். செரு வல்லார்—போர் புரியும் ஆற்றல் வாய்ந்தவர். இவ்வனம் வாழ்வர் காண். இவ்வணம்—இவ்வாறே. 9. சூர்ப்பணகை இவர்களைப் பற்றிப் பின்னும் கூறியது. பெட்புற—அன்புடனே. கவர்வான்—கவர்வது கருதி.

"காளைய ரிவ்விருவர் கட்கினிய பொற்புடையர்
வாளடர் மேனியரே வற்றாத—கோளுடையர்
மேவலரா மிவ்விருவர் வீரரைநீ வீய்ப்பதுவே
ஏவுவனான்" என்றா ளிவள். 10

## 3. அரக்கர் வதம்

எல்திரிவோ ரேந்த லிகல்பெய் கரனொப்பான்
வெல்லரிய வீர ரரக்கர்முன்—"ஒல்லைநீர்
சென்றவணம் மானிடரைச் செற்றிப்பா லேகுவிரால்"
என்றனனே சீறி யிரைத்து. 1

அவ்வரக்க ரார்க்க வதுகேட்டுக் காகுத்தன்
நொவ்வின்றி நுண்ணிடைக்குக் காப்பாகத் தெவ்வர்க்
கெமலா மிலக்குவனை யேவிக் கனைத்துச்
சமர்க்குப் படர்ந்தான் தனித்து. 2

எதிரார்ந்தா ரேதலரோ ரேழா யிரவர்
வெதிரோரா வீரர் தலைவர்—அதிவீரன்
தூடணனுங் கரனுந் தோலாந் திரிசிரசும்
பீடரப் பெய்தார் கணை. 3

கணைபெய்து வீய்த்தனனாற் காகுத்தன் மொய்ம்பால்
இணையில்லா ஏதலரை யைகிக்—கணமா
முனிவரெலாம் வாழ்த்தியம்ப மூரலுடன் மீண்டான்
தனிமகிழ்ந்தாள் நங்கை தெளிந்து. 4

---

10. சூர்ப்பணகை தனது விருப்பத்தைச் சொன்னாள், கரனிடத்து. மேவலர்—பகைவர்.

1. கரன் அரக்கர்க்கு விடுத்த ஆணை. எல்திரிவோர்—அரக்கர். ஏந்தல்—சிறப்புடையவன். அவண் (அங்கு) சென்று, அம் மானிடரைச் செற்று இப்பால் ஏகுவீர். 2. இராமன் தனித்துப் புறப்பட்டான். நொவ்வு—துன்பம். நுண்ணிடை—மெல்லிய இடை வாய்ந்த சீதை. தெவ்வர்—பகைவர். சமர்—போர். 3. ஏதலர், ஈர் ஏழ் ஆயிரவர்—பகைவர், பதினாலாயிரவர். வெதிர் ஓரா—நடுக்கம் என்பதே அறியாத. 4. காகுத்தன் அவர்களை அழித்தான், முனிவர்கள் இராமனைப் பாராட்டினர், பிராட்டி மகிழ்ந்தாள்.

வெற்றியுடன் மீண்டதனி வீரத் திருவுருவைப்
பொற்கொடியாள் சீதை பொருவில்லாப்—பற்றுடனே
புல்கினளே முன்னம் வதுவைநாள் பொங்கியதில்
மல்கிடவோ ரின்பம் மலர்ந்து. 5

கொடியா ளரக்கி கொதிப்படரத் தென்பாற்
கடுகப் படர்ந்தனளோ ரோலம்—இடியிற்
கலித்துப் பதின்முகற்குக் காட்டித்தன் மூக்கை
மிலைத்து விளம்பினளா லஃது. 6

"தேவர் திறனெல்லாந் தேய்வுறவே போர்செய்த
கோவே! நரரிருவர் கோள்மிக்கோர்—காவலனே!
கானிதனில் வாழ்வர் கருதகிலை நீயொன்றும்
ஏனடர்ப்பாய் சோர்வா மிது? 7

"தயரதன்றன் மைந்தர் தவத்தொளிருங் கோலத்
தயனவனே யொப்பர் அரிவை—வியனார்
நயனுடைய நங்கையுடன் நாடிவனம் வந்தார்
வயனுடைய மன்னவனே! கேள். 8

'மின்னனைய மெல்லிடையை வேந்தே! உனக்காக
உன்னியருகேக உறுவதிதே—பின்னும்
கொடிய திதுகேட்பாய் கோடாத் திறல்வல்ல
கடிய வரக்கர் கதி. 9

---

5. சீதையின் மகிழ்ச்சி. வதுவை நாள்—திருமணத்தின் போது. பொங்கியதில்—பொங்கிய இன்பத்தினும் மிக்கு. ஓர் இன்பம்.... பொங்கியதில் மலர்ந்து மல்கிட, புல்கினள். 6. சூர்ப்பணகை ஓலம் எழுப்பித் தென்பாற் படர்ந்தாள். இடியில் கலித்து - இடியினும் ஓங்க முழக்கி. மிலைத்து—களைத்து. 7. இவள் கேட்டது: இவ்வகைச் சோர்வு ஏன் அடரக் கொள்வாய்? 8. அயன் - பிரமன். அரிவை—பெண். வயன்—வலிமை; வெற்றி. 9. பின்னும் இவள் கூறியது. மெல்லிடை—மெல்லிய இடை வாய்ந்த பெண். உன்னி—கருதி. அருகு ஏக—அருகிலே செல்ல. கோடா - குலையாத. கடிய—வலிமையுடைய. கதி—நிலை.

கரனனைய வீரர் கணங்களைவெம் போரில்
முரணுருவாய் முந்து மிராமன்—அரிணமென
வீய்த்தான் வனமோ வெறியோடிற் றென்செய்கேன்
மாய்த்தே நமக்குயிராம் மாண்பு. 10

## 4. இராவணன் சூழ்ச்சி

தண்டகமாங் கானில் தனக்குயிராஞ் சுற்றத்தார்
தண்டலரைத் தாக்கவலர் தம்முடிவை—ஒண்டிறலான்
வேந்தன் தசமுகனோ கேட்டு வெதும்பினனே
பாந்த ளெனச்சீறிக் காய்ந்து. 1

சீறும் பதின்முகற்குத் தேம்பலொடு சூர்ப்பணகை
கூறும்: "கொடியனைய சானகியை—மாறில்
கவினுருவை நிற்கெனக் கொள்ளுவையேற் காண்பாய்
அவிதருமே யென்வன்மம்" என்று. 2

உலகுக் கனையாகு முத்தமியின் நோக்கே
நலனுக் கெனக்காணான் நஞ்சே—நிலவு
முளத்தானி ராவணன்றன் தங்கை யுரையே
உளத்தாரக் கொண்டனனே யொப்பு. 3

மாமனாம் மாரீசன் மாடணுகி மன்னன்றன்
காமந் தனைவிளக்கிச் சானகியா—மேமவொளி
தற்கெனவே கொள்ளுமுளஞ் சாற்ற நடமொன்று
மற்றவனுங் கூறும் மலைந்து. 4

---

10. கரன் போன்ற வீரர் மாண்டதைக் கூறிச் சூர்ப்பணகை, வனம் வெறியோடிற்று என்றாள். முரண்—வலிமை. அரிணம் பெண்மான்.

1. இராவணனது கலக்கம். தண்டலரை த க்கவலர்—பகைவர்களை எதிர்த்து அழிக்கவல்ல கரன் முதலோர். வெதும்பினன்—வாட்ட முற்றான். பாந்தள்—பாம்பு. 2. சூர்ப்பணகை தன் விருப்பத்தை வெளியிட்டது. தேம்பல்—அழுகை; வாட்டம். வன்மம் தீராப் பகை. 3. இராவணன் இதனை ஏற்றுக் கொண்டான். அனை—அன்னை. ஒப்பு—ஏற்றது. ஒப்ப (என) உளத்து ஆர கொண்டனன். உளம்—உள்ளம். 9. மாரீசனிடம் இராவணன் தனது விருப்பத்தைத் தெரிவித்தான். ஏமம் பொன். மலைத்து—நடுங்கி.

"கேழிலா வீறுடைமை கேட்பா யெனதுரையே
வாழியநீ மாவீரன் காகுத்தன்—பாழிப்
புயவலிமை யோர்ந்திலைகாண் புங்கமவ னெய்யச்
செயலழிந்தேன் முன்னொருகால் தேய்ந்து. 5

"அம்பொன்றா லென்னையவ னம்புதிக் கப்பாலே
வெம்பியிட வீழ்த்தினனாற் பாலியத்தில்—கொம்பிவளை
எண்ணுவதோ மாளாத வின்னற்கா மென்றுணர்வாய்
மண்ணிதனில் வாழவெனில் நீ. 6

"உனக்குதவ நீயென்பா லுற்றதிது மாள்வே
எனக்காகு மென்றறிவாய், ஏகி—உனக்காகும்
பெண்டிருடன் போகம் பெருக்கி மகிழுவைநீ
எண்டிசையு மேத்த விசைந்து." 7

மிக்கடரச் சீற்றம் விளம்பினனே வேந்தனிது
"ஒக்கலென வுன்பாலே யுற்றனனான்—உக்கலிலா
அன்புடனென் னாணை யரிதாற்ற கில்லையெனில்
துன்புறுவாய் துஞ்சுவைநீ காண். 8

"பொன்மானாய் பூவைமுன் போந்துலவி மாயத்தால்
அன்னாட்கோ ராசை யடர்விப்பாய்—பின்னர்
அகற்றுவைநீ காகுத்த ரவ்விருவர் தம்மை
இயற்றியொரு வஞ்சம் வளர்த்து. 9

---

5. மாரீசன் கூறியது : இராமனின் புயவலிமை நீ அறிய மாட்டாய். பாழி—வலிமை வாய்ந்த. புங்கம்—அம்பு. தேய்ந்து—வலிமை குறைந்து. 6. மேலும் கூறியது : நீ வாழ விரும்பினால் இந்த எண்ணத்தைக் கொள்ள வேண்டா. கொம்பு—பெண். 7. பின்னும் கூறியது : நீ சொல்லுவதை நான் செய்தால், நான் இறப்பது திண்ணம். உனது மனைவிமாருடன் போகம் பெருக்கி வாழ்வாய். 8. இராவணன் கொண்ட கடுங்கோபம். ஒக்கல்—சுற்றம். உக்கல்—குறைவு. 9. இராவணன் மாரீசனிடம் கூறிய வஞ்சகம். பூவை—சானகி. அடர்விப்பாய்—பெருகும்படி செய்வாய். ஒரு வஞ்சம் வளர்த்து இயற்றி, காகுத்தர் தம்மை அகற்றுவை.

அனுகு மழிவென்றே யோர்த்துமம் மாமன்
றனுகும் மருகற்கு நன்குதவத்—தணவாத
ஆற்றலுட னச்சூழ்ச்சி யாற்ற மனங்கொண்டான்
மாற்றமெதுங் கூறா மறுத்து. 10

## 5. மாரீசன் வதம்

மிச்சிறந்த மானொன்று மேய வியன்பொன்னாய்
ஆச்சிரமத் தின்முன்ன ரவ்விலங்கைக்—கூச்செறியச்
சானகியோ கண்டு தனதையற் கோதினளே:
"ஆனதுதா னெற்கே யிது." 1

"நானிதனை நாடுவனே நாளும் விளையாட
மானிதற்காம் வாமம் வரையிலதே—மானவர்த
மேறே! இதனை யெனக்காக்கு வாயென்னில்
வேறு மகிழ்வுளதோ யிக்கு?" ௨

அண்ணற் கிளவ லரிதொன் றுணர்த்தினனே
"எண்ணற்க இஃதோ ரிரலையெனக்—கண்ணுற்றேன்
ஏனைப் பிணையெல்லா மெற்றே முனரனுகி
ஏனோ பயந்தனவே" யென்று. 3

"ஆயிழைதன் னாசையிதே யாயாச மேதின்றிப்
போயிதனை நான்கொள்வன் பொன்னிவளை—ஆய
கருத்துடனே காப்பாய்நீ" என்றுரைத்தி ராமன்
சரத்துடனே சார்ந்தான் தனித்து. 4

---

10. மாரீசன் மருகனுக்கு உதவ மனங்கொண்டான். தணவா—நீங்காத.

1. ஆச்சிரமத்திற்கு முன் பொன்மான் ஒன்று மேயக் கண்டாள் சானகி. வியன் பொன்னாய்—வியக்குமாறு பொன் மயமாய். 2. சானகி இராமனிடம் கூறியது. மானவர்தம் ஏறே!—மாந்தருள் சிறந்த வீரனே! 3. இலக்குமணன் கூறியது: இது பொய் மான். எண்ணற்க—நினைக்க வேண்டா. இரலை—மான். பிணை—மான். இதைக் கண்டு மற்றை மான்கள் அஞ்சின. 4. இராமன் கூறியது. ஆயிழை—பெண். ஆயாசம்—சோர்வு. பொன் இவளை—பொன் போன்ற இவளை. சரம்—அம்பு.

அம்மானு மன்னாற்குத் தொல்லை யடர்த்தோட
எம்மாடும் பின்தொடர்ந்தல் வேந்தல்தான்—வெம்மைச்
சரமெய்ய மானு மிராமன் குரலில்
குரலுய்த்து மாண்டதுவே யாங்கு.'' 5

மனங்குலைந்து மையலுற மைதிலியும், ''அன்னாய்!
மனங்குலைதல் வேண்டாகேள் மாயம்—முனைந்ததிது
நாதனுக்குத் தீங்கெதுவும் நாடுவதோ?' என்றிளவல்
ஓதினனாற் கைகுவித்தாங் குற்று. 6

கொடிதொருசொல் சானகியுங் கூற இளவல்
நெடிதுயிர்த்து மூத்தோனை நேடிக் கடுகி
நடந்தா னிராவணனும் நாடி யவணே
படர்ந்தான் படிவனெனப் பாய்ந்து. 7

தண்டு கரத்தேந்திச் சடையோ சரிந்துலவக்
கண்டம் மறையொலிப்பக் காவிமிக—மண்டுந்
துவரார் கிழியுடுத்துத் தோன்றுநனைச் சீதை
கவர்வில் முனைமேற்றாள் கண்டு. 8

உரைந்து சென்னி யிருபஃது கையிலங்க
காரொன்று மேனிதனைக் காட்டியவன்—''தேறுவைநீ
நானோ இராவணன்காண் நங்காய்!'' எனவார்த்தான்
மானோ மயக்குற்றாள் சோர்ந்து. 9

---

5. மானை நெடுந் தொலைவு தொடர்ந்து, இராமன் கணையொன்று விடுத்தான். இராமனது குரலில் கூவி, அது இறந்தது. எம்மாடும்—எல்லாப் பக்கங்களிலும். வெம்மை—கடுமையான. 6. மைதிலியின் கலக்கம். இலக்குமணன் அவளைத் தேற்றியது. மாயம் முனைந்தது இது—மாயம் ஒன்றைக் கருதி இவ்வாறு செய்தது. 7. சானகி கூறிய கொடுஞ் சொல்லால் இலக்குமணன் இராமனைத் தேடிச் சென்றான். இராவணன் ஆச்சிரமத்தை நாடி விரைந்தான். படிவன்—முனிவன். 8. இராவணனது வேடம். துவர்—சிவப்பு. கிழி—கிழித்த துண்டு. கவர்வு—உபசரிக்க விருப்பம். 9. தன் உருவுடன் இராவணன் கூறியது. இருபஃது—இருபது. கார் ஒன்றுமேனி—கறுத்த உடல். மான் : சீதை.

ஆவென் றரற்று மணங்கை யரக்கனவன்
ஓவா தொறுத்து வளர்ந்தோங்கும்—மேவலிலே
தேரி லிருத்திச் செருக்கடர்த்துத் தென்பாலே
ஊரு முளங்குளிரத் தான். 10

## 6. சீதையைத் தேடுதல்

சீதைதனை மீட்பலெனச் சீறிச் சடாயுவப்
பாதகன்பாற் பாடடர்த்துப் பாய்ந்துமிகப்—பேதலித்து
போர்புரிந்தாங் குற்றகொடும் புன்கணிலே குற்றுயிராய்ப்
பார்தனிலே சாய்ந்தனனால் நைந்து. 1

மாயமான் மாரீசன் மாள விராகவனும்
ஆயதோ ரச்ச மகந்தனிலே—வாய்ந்து
குடிவின்பால் மீண்டனன் குறுகப்பின் தோன்றல்
இடரொன்றக் கொண்டான் குலைந்து. 2

கவலை மிகப்பொங்கிக் காரிகையைக் காண
இவர்பதைத் தேகினரே ஈடி—லவலமெனு
மாழியிலே யாழ்ந்தனரா லாங்கவளைக் காணாமல்,
'வாழ்வினியென்?" என்றார்த்தா ரோய்ந்து. 3

எங்கணுமே தேடியிவ ரேந்திழையைக் காணாமல்
பங்கமுற வுள்ளம் படிமிசையே—தங்கட்
குயிராஞ் சடாயு உலைந்திருப்பக் கண்டார்
மயலால் தளர்ந்தார் மனம். 4

10. இராவணன் சீதையைத் தேரிலேற்றித் தென்பாற் படர்ந்தான். ஒறுத்து—கடிந்து. மேவல்—விருப்பம்.

1. சீதையை மீட்கச் சடாயு, முயன்று உயிரிழந்தது. பாடு அடர்த்து—துன்பம் விளைவித்து. பேதலித்து—மனம் புழுங்கி. புன்கண்—துன்பம். 2. இராமனது கவலை. அகந்தனிலே—உள்ளத்தில். பின்தோன்றல் (தம்பி), (தன்பால்) குறுக, இடர் ஒன்ற கொண்டான். 3. இவர்களது துன்பம். அவலம்—துன்பம். ஆழி—கடல். 4. எங்கும் இவர் தேடிச் சென்று, வழியில் சடாயுவைக் கண்டனர். பங்கம்உற—குலைய, உலைந்து—குற்றுயிராய் வலிமை இழந்து.

# கிட்கிந்தா காண்டம்

## 1. அனுமான்

மலையாகும் ரிச்யமுகம் வாழுமரி முன்னோன்
சலியாத வீரன்சுக் ரீவன்—உலவாத
சீருடையான் வாயுமகன் சீல னனுமனுடன்
தேர்வுறவே வாழ்ந்தனனாற் சேர்ந்து. 1

வானரர்தங் கோனாகும் வாலியின் பின்தோன்றல்
தோணலத்த மாவீரன் சுக்ரீவன்—தானலந்து
முன்னோன்பால் நாடாமல் மூத்தோ னனுமனுடன்
துன்போய வாழ்ந்தான் துணிந்து. 2

மனித ரிவரிருவர் மல்லடருந் தோளர்
துனிக்காஞ் சிலையேந்தித் தோன்ற—நனிநடுங்கிச்
சுக்ரீவ னோடியொரு குன்றினுளே தோய்ந்தானால்
"எற்காகு மின்னலிதே!" யென்று. 3

ஒருபிரம சாரியென வுற்றங் கனுமான்
அரிதாம் வணக்கத் தணுகிப்—புரிவினிலிக்
கோமகரை, "நீவி ரெவரோ? கொளவுமக்கொன்
றாவதுவோ?" என்றா னடைந்து. 4

---

1. ரிசியமுக மலையில் வானரர்கள் தலைவன் சுக்ரீவன் அனுமானுடன் வாழ்ந்து வந்தான். கவி—வானரம். தகையன்—பெருமையுடையவன். உலவாத—குறையாத. தேர்வு—தெளிவு. 2. மூத்தோனுக்கு அஞ்சி அனுமானுடன் வாழ்ந்து வந்தான். தோள் நலத்த மா வீரன்—வலிமையான தோள்கள் வாய்ந்து சிறப்புடைய வீரன். தான் அலந்து—தான் துன்பமுற்று. மூத்தோன்—முதியோன். 3. இராமனையும் தம்பியையுங் கண்டு அஞ்சி, மலையில் ஒளிந்து கொண்டான் இது எற்கு ஆகும் இன்னல்—இவர்களது தோற்றம் எனக்குத் துன்பத் திற்கே. 4. அனுமான் இவர்களை அணுகி, அவர்கள் அங்குப் போந்தது யாது கருதி எனக் கேட்டான். கோமகர்—அரச குமாரர். உமக்கு கொள (கொள்ள) ஒன்று ஆவதுவோ?

கூறு மிலக்குமணன்: "கோசலர்தந் தார்வேந்தன்
மாறில் தயரதன்றன் மாமகனாந்—தீரனிவன்
என்னண்ணன் நாம னிராம னறிவாய்நீ
என்னை யிலக்குமண னென்று. 5

"தந்தைசொற் செல்வமெனத்தானேற்றுக்கான்வந்தான்
நந்தலிலாப் பத்தியினில் நம்பியிவன்—எந்தையெனப்
பின்தொடர்ந்தேன் இத்தூயோன் பெய்நலனால்
அன்படர்ந்தே யாற்றப் படிந்து. [தொண்டினிலே 6

"எம்முடனே போந்தா ளிவன்துணைவி சானகியும்
எம்மையொரு வஞ்சகத் தாலகற்றி—அம்மை
தனைக்கவர்ந்தான் தாழா திராவணன்கா ணன்னாள்
தனைத்தேடிச் சார்ந்தோமா ஙிங்கு. 7

"அரக்கன் வடிவினிலே வந்த இயக்கன்
இரக்கத் தியம்பினனே யிங்ஙன்—குரக்கினத்தின்
தோன்ற லொருவீரன் சுக்ரீவன் நட்பொன்றே
ஏன்று நலங்கொள்வீ ரென்று." 8

சொல்லு மனுமானும்: "சுக்ரீவ னென்தலைவன்
மல்லார் வரைத்தோளன் நானிவன்றன்—செல்வத்
துணைவன் பெயரோ அனுமானாம்" என்றே
இணையத் தனதுருவை யேற்று. 9

---

5. இலக்குமணன் இராமனையும் தன்னையு அறிமுகப் படுத்திக் கொண்டான். மாறு இல்—தனக்கு ஒப்பில்லாத, 6. பின்னும் கூறியது: இவனிடத்துப் பரிவால் இவனுடன் நான் வந்தேன். நந்தல்—குறைவு, தொண்டினில் அன்பு அடர்ந்து. ஆற்ற—மிக. 7. பின்னும் கூறியது. அம்மை—தாய்; சானகி. தாழாது—தாமதியாமல் வாய்ப்பை ஏற்று. 8. பின்னுங் கூறியது; ஓர் இயக்கன் கூறியதைக் கொண்டு அங்கு வந்தது. குரக்கு—குரங்கு. 9. அனுமான் கூறியது: துணைவன்—மந்திரி. தன் உருவை இணைய ஏற்று—தனது இயல்பான உருவில் தோன்றி. மல்—திண்மை. வரை—மலை. செல்வத் துணைவன்—இவனுக்குச் செல்வம் போல் கருதப் பெறும் துணைவன்,

"இக்கணமே நும்மை யெனதிறைசுக் ரீவன்முன்
சிக்கெனவே சேர்ப்பன் தெளிவீரே—தக்கீர்!
முதுகிலுமை யேற்பன்" எனவே மொழிவர்:
"இதுவரிதா மின்பமே" யென்று. 10

## 2 நட்புக் கோள்

அனுமானுஞ் சுக்ரீவன் றன்பா லணுகிக்
"கனிவிலிவர் கானுன் துணைவர்" —எனவோதிக்
கூற அறிமுகமே மற்றவனுங் கூறினனே:
"ஏறனையீர்! எற்காவீர்" என்று. 1

அவன்பாலே நட்பொன்றே நாட விராமன்
அவனோதும்: "எற்குயிரா மன்பா—விவனுற்றாய்
மீமகிழ்ந்தேன்" என்றியம்பி மெய்ந்நடுங்கக் கூறுந்தன்
நோவதனை மெத்த விரித்து. 2

கிட்கிந்தைக்கோன் வாலிஎன் முன்னோன் கேடிழைக்கும்
மட்டில்லா மாறு வளர்த்தனனால்—கட்கிலனாய்
நானிங்கு வாழ்கின்றேன் நாடியிவண் வாரானால்
தானஞ்சி யோர்சாப மோர்ந்து. 3

"என்னில் தனைக்கவர்ந்தா னென்னுயிரு மேற்கில்லை
என்னை யிவன்மாய்ப்பன்" என்றோதி—"உன்னுடனே
நட்புறலே நன்றென்று நாடுவலே நட்புறுவோம்
தெட்புறவே" என்றான் றெளிந்து. 4

---

10. இவ்விருவரையும் சுக்ரீவனிடத்து முதுகிலேற்றுச் செல்வதாக அனுமான் கூறினான்.

1. அனுமான் இவர்களை சுக்ரீவனிடம் அறிமுகஞ் செய்தான். கனிவு—அன்பு. 2. அவனிடத்தில் இராமன் நட்பே நாட, இது கேட்டு அவன் மகிழ்ந்தான். சுக்ரீவன் தனது நோவு (துன்பம்) அதனை மெத்த விரித்து இராமனுக்குக் கூறினான். 3. வாலி தன்னிடங் கொண்டுள்ள பகையைச் சுக்ரீவன் ஓதினான். மாறு—பகை. கட்கு இலனாய்—அவனது கண்ணில் தோன்றாமல். அவன் இங்கு வர மாட்டான், சாபமொன்றாலே. 4. வாலி இழைத்த தீங்கு. என் இல்—என் மனைவி. தெட்புற—திடமாக.

வானரர்தம் முன்னோனும் மானவர்தம் வாரணமும்
தேனொடுபால்சேர்ந்ததெனச் சேர்ந்தனரே-வானுயரும்
அங்கியிறை முன்னே யவனும் வலஞ்சுழன்று
மங்கலமே சுட்ட வளர்ந்து 5

அன்பனவன் சங்கை யகற்றவெனக் காகுத்தன்
வன்மரங்க ளேழின்பால் வன்னியுமிழ் —வுன்சரமொன்
றெய்துதுளைத் தானா லிளைத்த கவிமுன்னோன்
வெய் துறலே வீய்க்க விரைந்து. 6

வாலி வதமே மனங்கொள்ளுஞ் சுக்ரீவன்
மேலாம் மிடுக்க னிராமன்றான்—ஏலும்
புகலெனவே கண்டான் புகலு மிராமன்
இகலிலதே நிற்கினியே" யென்று. 7

"வருவாய்நீ என்றுடனே வாலிதனை மாய்க்கப்
பொருவாய்நீ யன்னான்முன் போந்தே—அறிவாய்நீ
உற்றுனக்குச் செய்வ னுதவி" யெனவுரைத்தான்
தற்றுணையி ராம னுறுத்து. 8

ஆதவன்றன் மைந்தன் னருந்திறலேன் தான்சினந்து
கோதிலவாம் புங்கங்கள் கொண்டேக—ஆதரவில்
நண்பனி ராமன் நடந்தனனே நட்டவன்பால்
எண்ணிலதா மன்பொன்றே யேற்பு. 9

*5. இருவரும் நட்பேற்றனர். வாரணம்—யானை. அங்கி—அழல். அழல் வலமாகச் சுழன்று இவர்களுக்கு மங்கலத்தைச் சுட்டியது. 6. சுக்ரீவனது சங்கையை அகற்ற இராமன் ஒரே கணையால் ஏழு சால மரங்களைத் தொளை செய்தான். சங்கை—இராமனால் தனது எண்ணம் நிறைவேறுமோ என்று. இளைத்த கவி—துன்புற்ற வானரம் (சுக்ரீவன்). வெய்துறல்—துன்புறுதல். 7. சுக்ரீவன் மனந்தேறியது. மிடுக்கன்—வலிமையுடையவன். இராமன் கூறியது. நிற்கு இனி இகல் இலது: இனி உனக்குத் துன்பமே இல்லை. 8. இராமன் சுக்ரீவனுக்குக் கூறியது. பொருவாய்—போர்செய்வாய். உறுத்து...திண்ணமாக, 9. சுக்ரீவன் புறப்பட்டான். புங்கம்—அம்பு.*

புரியின் நுழைவினிலே போந்துசுக் ரீவன்
பெரிதோர் குரலாற் பிணைந்து—"வருவாயோ
வாலீ! வலியதாம் மல்லுக்கே" என்றானூழ்
கால வொலியிற் கனைத்து. 10

## 3. வாலி வதம்

வியந்து விளம்பினனே வாலியிதே: "என்பாற்
பயந்து பதுங்கும் பதரே!—சயந்தனையே
போருக்குக் கூவும் புதுமையிதென்?" என்றோதிப்
போருக்குப் போந்தான் கலித்து. 1

"யாரடா என்பாற் பயந்தோடி யாண்டுற்றாய்?
போரிடக் கூவுகிறாய் பூரியனே!—பாரிதனில்
வாழுதியோ?" என்றார்த்து வந்தான் வலியாலே
கேழிலானாம் வாலி கிளர்ந்து. 2

இரவிமகன் றன்னுடனே இந்திரனின் செல்வன்
பொருவிலதாஞ் சீற்றம் புணர்த்து—வரையில்
வயிரம் வளர்த்துப் பொருதனனே மல்லடர்ந்த
வயிரப் புயங்கள் மதர்த்து. 3

ஆசுகுலைந் தேங்க அரற்றினரே யவ்விருவர்
ஏசியெதிர்த் தேற்றபல சூளோதிப்—பூசலிலே
மண்டினராற் பின்பொருது மண்ணிற் புரண்டனரே 4
புண்படவே காயம் பொதிர்த்து.

*10. சுக்ரீவன் வாலியைப் போருக்கு அழைத்தான். ஊழ் கால ஒலியிற் கனைத்து—ஊழிக் காலத்துப் பேரொலியினும் முழங்கி.*

*1. வாலியின் வியப்பு, பதரே—அற்பனே! கலித்து—ஆரவாரத்துடன், 2. வாலி கூறியது. யாண்டு—எங்கேயோ. பார் இதனில் வாழுதியோ—உன்னை மறந்தாயோ? வலி—வீரம். கேழ்—ஒப்பு. 3. இருவரும் போர் செய்தனர். பொரு—ஒப்பு. வரை இல்—எல்லையில்லாத. வயிரம்—பகை. வயிரப் புயங்கள்—திண்ணிய புயங்கள். 4. திசைகள் நடுங்குவாறு இவர்கள் போர் செய்தனர், ஆசு—திசை, சூள்—சபதம். பூசல்—போர். பொதிர்த்து—நடுங்கி,*

ஆயிடையங் கங்கியுமி ழும்பொன்று வாலியுரம்
பாய்தரவே சோர்ந்து பதறியவன்—"மாயமிதென்!
என்றரற்றிப் பாரிற் படிந்தனனே ஈடில்லாக்
குன்றனைய வாகு குலைந்து. 5

எதிர்நின்ற ஏந்தலி ராமனையவ் வாலி,
"எதிர்நின்றே என்நீ எதிர்த்தல்—விதிவயினே
செய்திலையே" என்றனனே செப்பு மிராமனும்,
"செய்ததற மென்"றிருவே சீர்த்து. 6

வாலிவியந் தோதும்: "மணிவண்ணனே! ஆளரியே!
வாலிழையாம் நின்னுயிரின் வாட்டமொடுஞ்—சால
அறனெல்லா மோர்வாயுன் செய்கை யறிந்தேன்
உறுவிதியா லென்றே யிது." 7

இராமன் தனைவணங்கி யிந்திரனின் செல்வன்
விராமத் துயிர்நீத்தான் வெய்துற்—றுராவு
பரிவிற் பரிசனமுங் கேளும் படர்ந்து
பெரிதே புலர்பப் பிணைந்து. 8

அரிகுலத்தின் கோமானா மத்தற் குரிதாங்
கருமமெலா மங்கதன்தா னாற்ற—விரிகதிரோன்
செல்வன்சுக் ரீவனையே சேர்ந்ததுவே கோனென்று
மல்குமரிக் கூட்டம் மகிழ்ந்து. 9

5. அப்போது வாலியின் மீது ஓர் அம்பு பாய்ந்தது. அங்கி–நெருப்பு. உரம்—மார்பு. வாகு–தோள். 6. வாலி எதிர் நின்ற இராமனைக் கேட்டது. விதிவயின்—முறைப்படி. இராமன் கூறியது: செய்தது அறமே யென்று. 7. வாலிழை—பெண்; உன் மனைவி, உன்னைப் பிரியாத தேவி பிரிந்தாள்; அறம் கோடாத நீ இது செய்தாய். எல்லாம் விதியாலே. உறு விதியால்—நேர்ந்த விதியாலே. ஆளரி—ஆண்சிங்கம். 8. வாலி உயிர் நீத்தான். விராமம்–ஓய்வு. உராவு—அடர்ந்துள்ள. கேள்—சுற்றம். 9. அங்கதன் வாலிக்குக் கருமஞ் செய்தான்; சுக்ரீவன் அரசேற்றான். அரி—வானரம். அத்தன்–-தகப்பன். மல்கும் அரி கூட்டம்...கோன் என்று சேர்ந்தது.

இருவ ரிராகவரோ ராசி யியம்பப்
பொருவிற் புலவ னனுமான்—புரிவடர
ஒப்பில்லா மந்திரியாய் வாய்ந்தனனே சுக்ரீவன்
அப்பதிக்கே யேற்க வரசு. 10

## 4. சானகியைத் தேடுதல்

மாரி முடிவினிலே மைதிலியைத் தேடவெனப்
பாரிற் படையெங்கு மேவுவதாய்—வாரத்தில்
வானரக்கோன் கூற முலைமுழைஞ்சில் மன்னினரே
மானவர்க்காம் முன்னோர் மகிழ்ந்து 1

மாரி குலைந்தும் மனனா மிரவிமகன்
பாரியை தன்னோடு தான்படிந்து—போரக்
களிக்கக் கடமை யுணர்த்தவி ராமன்
இளவல் தனையேவுங் காய்ந்து. 2

வெள்கி வெளிவந்து சுக்ரீவன் மீக்கலங்கித்
தெள்ளத் தெளிவிலிது செப்பினனே:—"எள்கலிலா
வீரரைமுன் னேவியுளன் மேவியிவ ரெங்கெங்கும்
பாரடரத் தேடுவர்காண் தேர்ந்து. 3

ஆசெல்லா மக்கோமா னாணை பரவியதே
மாசில்லா வானரர்தம் வாகினியோ—தேசின்
கணங்கள் பலபலவா வந்தடர்ந்த கோனை
வணங்கி யொலித்திடவே வாழ்த்து. 4

*10. சுக்ரீவன் அரசேற்றான்; அனுமான் மந்திரியானான். புலவன்—அறிஞன். புரிவு— அன்பு.*

*1. மைதிலியைத் தேட வானர சேனையை மாரிக்குப் பின் அனுப்புவதாக சுக்ரீவன் கூற, இராமனும் இலக்குமணனும் ஒரு குகையில் வாழ்ந்து வந்தனர். முழைஞ்சு—குகை. 2. சுக்ரீவனைக் காண இராமன் இலக்குமணனை ஏவினான். மனன்—மன்னன் இரவிசுதன்—சுக்ரீவன். இளவல்—தம்பி. 3. சுக்ரீவன் கூறியது. எள்கல்—இழிவு, கூசுதல். 4. சுக்ரீவனது ஆணை எங்கும் பரவியது. வாகினி—சேனை. தேசு—வீரியம். வாழ்த்து ஒலிக்க, வந்து அடர்ந்த (அடர்ந்தன).*

சதவலியுங் கேசரியுஞ் சாம்பவனு மன்றி
அதிகர்குல மாங்குபடை யோடும்—மதமலைபோல்
வானரரு மெண்கினமும் மாகடல்போல் வந்தடரக்
கானதிர மண்டுங் கலிப்பு. 5

முடிவிலதாய்க் கானகத்தில் மொய்த்தபடை வீரர்
குடதிசையுங் கீழும் வடக்குங்—கொடிதுரற்றி
மேவினரே சீதைதனைத் தேடி விரைந்தெங்குந்
தாவினரால் பாரெங்குந் தாம் 6

தேசுந் திறனுஞ் செறிந்த மிடலாண்மை
பேச வரிதாய்ப் பெருகிவளர்—பாசம்
இனையவெலாம் வாய்ந்த அனுமாற் கியம்பும்
மனமுறவே மன்ன னழைத்து. 7

"ஒப்பிலதோ ரன்புடையோய்! ஒல்லைநீ யங்கதனோ
டிப்பெரிய சேனையினை யேற்றெங்குஞ்—செப்பமுறத்
தென்பால் நிலமெங்குந் தேவிதனைத் தேடியிவண்
இன்ப முடன்வருவா" யென்று. 8

அனுமனரு குற்ற குரிசிலர்தந் தாள்கள்
நனிவணங்க ஆசி நவின்றார்—இனிய
னிராமன்றன் கையாழி யீந்தான், "இதுகாண்
இராவிடையாட் கீவாய் நீ" என்று. 9

5. வானரர் சேனை வந்து அடர்ந்தது. வானர வீரர்: சதவலி, கேசரி, சாம்பவான். மதமலை—யானை. எண்கு—கரடி. கலிப்பு—ஓசை. கான் அடர மண்டும். 6. வீரர் எல்லாத் திசைகளிலுஞ் சென்று தேடினர். குடதிசை—மேற்கு. கீழ்—கிழக்கு. கொடிது உரற்றி—அஞ்சுமாறு ஆரவாரஞ் செய்து. 7. அனுமானின் பண்புகள்: தேசு, திறன், மிடல்(வலிமை), ஆண்மை, பாசம். இவனிடம் சுக்ரீவன் கூறியது. 8. தென்பால் சீதையைத் தேடுவாய் என்றான் சுக்ரீவன். செப்பம்—செம்மை. 9. அனுமான் இராமனையும் இலக்குமணனையும் வணங்க, அவர்கள் ஆசி கூறினர் இராமன் தனது விரலில் அணிந்திருந்த மோதிரத்தை அனுமானிடம் கொடுத்து, "இதைச் சீதையிடம் சேர்ப்பாய் என்றான். இராவிடையாள்—நுண்ணிய இடையுடைய சீதை.

பூசலெழ வெங்கும் புழுதியொடு போரொலியும்
ஆசடரத் தேடியதே யத்தானை—தேசன்
அனுமனொடு மங்கதனன் னார்கடத்தப் பொங்கும்
கனிவினிலே வெற்றி கலித்து. 10

## 5. தென்பாற் சேனை

திசையடரப் பொற்கொடியாள் சீதைதனைத் தேடி
விசையழிந்து மீண்டனரே வேற்றார்—அசைவுறவே
போர்புரியும் வானரர்கள் பொன்றாத் திறனுடையார்
தார்புனையுங் கோமான்பாற் சார்ந்து. 1

தெக்கினிலே தேடிவருஞ் சேனை புவியெங்கும்
மிக்கடருங் கானமொடு வேதண்டம்—புக்கரிய
கற்புழைகள் தேடிமிகக் காய்தருமோர் பாலையிடைப்
பொற்பின் பிலமொன்றிற் புக்கு, 2

கும்பிருளிற் கூசிக் குமுறுதலு மச்சத்தால்
செம்பவள வாயாள் சுயம்பிரபை—பம்புகதிர்
தன்னிடையே தான்தோன்றித் தண்ணளியாற்
சொல்நயமே தோயச் சுரந்து. [சாற்றுமிது, 3

"வீரர்காள்! விம்மேன்மின் வீங்கிருளை நீர்கடந்து
தேறிவெளி யேறச் செயவல்லேன்—ஆர
நயனங்கள் மூடி நடப்பீரா லும்மை
வியனடர வுய்ப்பன் வெளி." 4

---

10. அனுமானும் அங்கதனும் சேனையை நடத்திச் சென்றனர். தானை—சேனை.

1. சீதையைக் காணாமற் சேனைகள் பல மீண்டன. விசை—வேகம். வேற்றார்—பகைவர். அசைவுற—நடுங்க. பொன்றா—குறையாத. 2. தெற்கில் சென்ற சேனை எங்குந் தேடியது. வேதண்டம்—மலை. கற்புழை-குகை. பாலை—பாலைவனம். பொற்பு—அழகு. 3. கும்பிருளில் இவர்கள் நடுங்கிக் கூசலிட்டனர். குமுறுதல்—பேரொலி செய்தல். சுயம்பிரபை கூறியது. சொல் நயம் சுரந்து தோய, இது சாற்றும்: இவ்வாறு கூறினாள். 4. இவள் கூறியது: விம்மேன்மின்—அழாதீர். ஆர—முற்றும். வியன் அடர—மிகவும் வியக்குமாறு.

கண்ணிரண்டும் மூடிக் கடுகப் படர்தரலும்
எண்ணரிதா மின்பத் தெளிதிலிவர்—கண்ணிமைப்பில்
மீண்டனரே பின்னும் மெலிவின்றி முன்படர்ந்தார்
ஆண்டகையா ருக்க மடர்ந்து. 5

எங்கணுமே யேந்திழையை யிவ்வீரர் காணாமல்
பொங்கியெழுஞ் சோர்விற் புழுங்கியடைந்—தங்கோர்
மலையாம் மகேந்திரத்து மன்னிப் பெரிதும்
உலைவால் நெகிழ்ந்தா ருளம். 6

தங்கோன் வரைந்ததொரு காலவரை தான்தணவப்
பொங்குந் துயரிலிவர்: "போக்கிலை—இங்கேயாம்
ஊணின்றி மாள்வதுதா னுத்தமமாம் வேறெதுவுங்
காணகிலம்" என்றார் களைத்து. 7

அங்குறையுஞ் சம்பாதி யாங்கழுகு தன்கண்ணால்
எங்குமெதிர் நோக்கி யுணரவலன்—பங்கமறத்
தானோக்கித் தென்பாலே சாற்றும்: "இலங்கையிலே
மானோக்கி வைகுமிவள் சோர்ந்து" 8

எதிரடர்ந்த மாகடலைத் தாண்டுவதே யென்று
வெதிரடர்ந்து வீரரெலாம் தாம்தாம்—அதிகமெனக்
கொண்டதொரு திண்டிறலைக் கூறினரே ஏற்பவெனக்
கொண்டிலமோ ராற்றல்தா னென்று. 9

4. இவர்கள் குகையினின்று வெளிவந்து மீண்டும் ஊக்கத்துடன் படர்ந்தனர். 6. சீதையைக் காணாமல் மனம் புழுங்கி மகேந்திர மலையில் தங்கினர். உலைவு—இளைப்பு, அச்சம், 7. சுக்ரீவன் கூறிய கால வரை கடந்ததால் இவர்கள் அங்கேயே தங்கி இறப்பதே மேல் எனக் கூறிக் கொண்டனர். ஊண்—உணவு. 8. சம்பாதி இவர்களுக்குக் கூறியது: சீதை இலங்கையில் இருக்கிறாள் என்று. பங்கம் அற—குறை வில்லாமல், தான் தென்பால் நோக்கி, சாற்றும் (கூறினான்) 9. இவர்களது கலக்கம்: கடலை எவ்வாறு தாண்டுவது என்று. வெதிர்—அச்சம். ஏற்ப ஓர் ஆற்றல் தான் கொண்டிலம் என்று கூறினர்: கடலைத் தாண்டி அப்பாற் செல்லும் ஆற்றல் தமக்கில்லை யென்று.

உடனுற்ற வீரரெலா மூக்க வனுமான்
திடமுற்று : "நான்மருத்தின் செல்வன்—கடலைக்
குளப்படிபோற் தாண்டவலன்" என்றார்த்தான் கூடிக்
களிப்புறவே வீரர் வளைத்து.

*10. வீரர்கள் அனுமானுக்கு உற்சாக மூட்ட, அவன் தான் கடலைக் கடக்க முடியும் என்று முன் வந்தான். ஊக்க—உற்சாகமூட்ட. திடமுற்று—மனத்தில் பலங்கொண்டு. மருத்—வாயு பகவான். "நான் தாண்டவலன்" என்று ஆர்த்தான், வீரர் (அவனை) வளைத்துக் களிப்புற.*

## சுந்தர காண்டம்

### 1. கடல் தாவுதல்

ஆழ்கடலின் முன்ன ரனுமானோர் மாவடிவில்
மாழ்கலிலாச் சிந்தையனாய் மாகத்து—வாழ்தருவோர்
தேவரெலாந் தாம்வியப்பத் தென்பாலே தாவினனே
தேவிதனைத் தேடத் திரிந்து 1

வேதண்ட மாமேனி வேலையதன் மேலோங்கிக்
கோதண்ட முய்த்த கொடுங்கணைபோல்—மீதண்டுஞ்
சத்துவங்கள் தாமதிரப் பாய்ந்தா னனுமானும்
மொய்த்தடர வாற்றல் முகிழ்ந்து. 2

வாரிதியில் மன்னுமலை மைந்நாகம் மேலெழுந்தோ
ரார்வினிலே வவ்வனுமான் தன்பாலே—வாரமுடன்
தங்கிப்பின் னேகவெனச் சாற்ற அவனுரைத்தான்
"இங்கிதுதா னிப்போதோ?" என்று. 3

சுரசையெனுந் தெய்வப்பெண் ணோரக்கி யாகிப்
பரவையிலே தான்பரவிப் பைய—விரியத்தன்
பேழ்வாயும், "புக்கிதனுட் போவாயேற் பெற்றியனே!
வாழ்வாய்நீ" என்றாள் மதர்த்து. 4

---

1. அனுமான் கடலின்மேல், வானில் தாவிச் செல்லும் போது தேவர்கள் வியப்புற்றனர். மாழ்கல்—கலக்கம், மயக்கம். மாகத்து—ஆகாயத்தில். 2. பெரிய வடிவில் அனுமான் தாவியது. வேதண்டம்—மலை. கோதண்டம்—வில். 3. மைந்நாகம் என்ற மலை கடலிலிருந்து மேல் எழுந்து, அனுமானைத் தன் மீது தங்கி இளைப்பாறிச் செல்லுமாறு கூறியது. வாரிதி—கடல். இங்கு இதுதான் இப்போதோ?—இப்போது இது செய்வதற்கில்லை. 4. தேவர்களால் ஏவப்பட்டுச் சுரசை என்னும் தெய்வப் பெண் அனுமானது திறலைச் சோதனை செய்யக் கடலில் வாயைத் திறந்து கொண்டு, இதனுள்ளே புகுந்தால் நீ போகலாம் என்றாள். பேழ்வாய்—குகைபோன்ற வாய். பெற்றி—திறல்.

உருவத்தைத் தானொடுக்கி யோடியவள் வாயில்
பொருவற்ற வாயுமகன் புக்கான் - அரிதென்றே
ஆகாயத் தெல்லாரு மார்த்தனரே மீண்டேயம்
மாகாயத் தானூர்ந்தான் மன். 5

சாயைதனை யீர்க்குஞ் சடக்குடையா ளோரரக்கி
சாயையதா லேற்றித் தகையானை—வாயடர
உண்ணவென வாய்திறந்தாள், "உண்டற் கிதுவன்றோ
எண்ணரிய வாய்ப்பாகு" மென்று, 6

காயந் தனையொடுக்கிக் காய்ந்து கடிதிலவள்
வாயுட் புகுந்தனனால் வாயுசுதன்—மாயத்தால்
அன்னாள்தன் வாயை யறுத்து வெளிவந்தான்
இன்னாப்பே யில்லாமற் பின். 7

"என்னிதுவோ நின்வீரம்! என்னிதுவோ நுண்ணறிவு!
என்னரிதா மாற்றல்!" எனவாழ்த்தி—மன்னினரே
விண்வா யிமையோர்தாம் வேகத் தனுமானோ
கண்ணார் கடல்கடந்தக் கால். 8

அந்நகர்க்குக் காப்பா மரக்கி இலங்கிணிதன்
முன்னணுக வன்னாளை முன்னுருவில்—கன்னவிலுந்
தோளாற் புடைத்தா னனுமானுந் தோற்றவளுங்
கோளோய்ந்து கூறினனா ளீது. 9

---

5. அவளது வாயில் புகுந்து விரைவில் வெளி வந்தான், அனுமான். மா காயத்தான்—பெரிய உடல் கொண்ட அனுமான். மன்: அசை. 6. ஓர் அரக்கி அனுமானை உண்பதற்காக அவனது நிழலைப் பற்றி இழுத்தாள். சடக்கு—வேகம். சாயை—நிழல். 7. அனுமன் அவள் வாயிற் புகுந்து, அதைக் கிழித்து வெளிவந்தான். இன்னாப்பு—துன்பம். 8. தேவர்களது வியப்பு. கண் ஆர் கடல்—பரந்த கடல். 9. இலங்கையைக் காக்கும் அரக்கி இலங்கிணியை அனுமான் எதிர்த்துப் புடைத்தான். தன் முன் அவள் அணுக, அன்னாளை (அந்த அரக்கியை), முன் உருவில்—இயல்பாக உள்ள உருவில். கோள்-வலிமை. இலங்கையை அடைந்ததும் அனுமான் தன் உருவைக் குறுக்கிக்கொண்டான். அரக்கியை எதிர்க்கும் போது பெரிய உருவில் எதிர்த்தான்.

"வெல்லகிலா வென்னையுமே வென்றாய் திறலாலே
சொல்லுமிது நான்முகனும்: "தோணல—வல்லவிறல்
வானரமொன் றுன்னையுமே வாட்டுங்கா லிந்நகரந்
தானழியுஞ் சோலை தளர்ந்து." 10

2. பிராட்டியைக் கண்டமை

இராமன் திருநாம மேமமென வோதிப்
பராவு படிவஞ் சுருக்கி—விராவு
புகழா னனுமானோ புக்கான் நகருள்
திகழ நிறைமதியின் சீர். 1

மாடமொடு மாளிகையும் வானில் வளர்வனவாங்
கூடமொடு கோபுரஞ்செய் குன்றுகளும்—நாடரிய
பாசறையு மன்ன பலபலவே வவ்வனுமான்
கூசமறத் தேடினனே கூர்ந்து. 2

வேந்தன் பவனத்தில் மேலோங்கு மார்வத்தில்
வாய்ந்த தலமெங்கும் மட்டின்றி—யாய்ந்து
கடவுளர்த மீட்டமெலாங் காய்ந்தவக் கோனாம்
மிடலானைக் கண்டான் வியந்து. 3

குகையினிலே துஞ்சுதிறற் கோளரியே யென்னத்
தகையகிலா வீரத் தரக்கன்—மிகுமோர்
செருக்கடர்ந்து தூங்கத் திறலனுமா னங்கே
வெருக்கொள்ளான் கண்டான் வியந்து. 4

---

10. இலங்கிணி கூறியது. தோள் தலத்தால்—தோளின் வலிமையால்.

1. இராமனின் திருநாமத்தை யோதி அனுமான் நகருள் புகுந்தான். முழுமதியின் ஒளி எங்கும் படர்ந்திருந்தது. ஏமம்—காப்பு, செல்வம். பராவு—பரவுகின்ற, பெரிய. விராவு—விரவும். 2. அனுமான் தேடிய இடங்கள். கூசமற—அச்சமில்லாமல். 3. இராவண பவனத்தில் இராவணன் தூங்கிக் கொண்டிருப்பதைக் கண்டான். மிடல்—வலிமை. காய்ந்த—போரில் வென்று தனக்காக்கிக் கொண்ட. 4. இராவணன் குகையில் சிங்கம் துயில்வதுபோல் செருக்குடன் கிடந்தான். கோள் அரி—மிடுக்குடைய சிங்கம், வெருக்கொள்ளான்—அஞ்சவில்லை.

''என்னிவன்றன் தேசோ! இணையிலா வீரமுமென்!
என்னிவன்ற னாற்றல்! இழிசெயலால்—அன்னோ!
இராமனா லின்னானு மீடழிவன்'' என்று
பராமுகத் தோதுமிவன் பார்த்து. 5

இடையிடையே யாங்கலைந்தே யெங்கெங்குங் காணும்
அடவிகளுந் தண்டலையு மன்ன—திடமுறவே
அவ்வனுமான் தேடி யகங்குலைந்தான்,'' தேவிதனை
எவ்விடமோ காண்பனினி?'' என்று. 6

''இதுகாறு மேற்ற வியற்றியெலா மென்னே
சிதைவுறவே சிந்தை சிதையும்—கதியோ
பிறிதிலையால் மீள்வதுதான் பேச்சிலலை'' என்று
பெரிதயிர்த்தா னத்தூத னாங்கு, 7

''வணக்க மிராமற்கும் மங்கை யிவட்கும்
வணக்க மயனோ டரற்கும்—வணக்க
மமரரிறை யாதிக்கும்'' என்றனுமான் தேடு
மமைவினிலே யெவ்விடத்து மாய்ந்து, 8

உயிர்த்தெழுமோ ரூக்கத் தனுமானோ பின்னும்
அயிர்ப்பொழித்துத் தேட வருகில் —நயப்பொளிரச்
சோலை யசோக வனம்பொலிந்து தோன்றவவண்
மேலும் படர்ந்தான் விரைந்து. 9

5. அனுமான் இராவணனைக் கண்டு வியந்தது. இழிய செயலால் இத்தகையோன் இராமனால் மாள்வன் என்றான் அனுமன். இறைமை—தலைமை. பராமுகத்து—அசட்டையாக. 6. ஆங்குள்ள இடங்கள் எங்கும் அனுமான் தேடினான். அடவி—சோலை. தண்டலை—நந்த வனம். 7. அனுமான் கலக்கம். இயற்றி—முயற்சி. அயிர்த்தான்—ஐயமுற்றான், 8. முயற்சி பயனடைய அனுமான் யாவரையும் வணங்கித் தேடினான். அயன்—பிரமன். அரன்—சிவன். அமரர் இறை ஆதி—நித்ய சூரிகளின் நாதனான நாராயணன். 9. ஆங்குள்ள அசோக வனத்துள் சென்றான் அனுமான். அயிர்ப்பு—மந்தம், சோம்பல். நயப்பு—மகிழ்ச்சி. உயிர்த்தெழும் ஓர் ஊக்கம்—மீண்டும் கொண்டதோர் ஊக்கம்.

ஆங்கோர் தருவி னடிநிழலிற் சானகியை
ஆங்கா ரரக்கியர்த மீட்டத்தில்—ஏங்கி
ஒடுங்கி யுறைய இவன்கண்டான் உள்ளம்
நடுங்கி நலிவுறவே நட்டு. 10

## 3, பிராட்டியின் துயர்

இராமனெனு மிந்துதனிக் கோலோச்சும் போதவ்
விராமனெனும் நாம மியம்பி—இராமவரன்
தூதன் துடியிடையாள் சீதையைக் காணவொரு
பாதவத்தி லுற்றா னொளிந்து. 1

தன்கணத்தை நீத்துத் தகவறியா நாயினமாம்
வன்கணத்துள் வாடும்பெண் மானெனவே—புன்கண்
ணதுவொன்றே காணு மரிவைதனைக் கண்டு
வெதிருற்றான் வாயுசுதன் வேர்த்து. 2

"என்னிவளோ வன்னையற் கேயொப்பா மிச்சுடரை
என்னைய யெங்ங னிதுகாறும்—இன்னலுறத்
தான்பிரிந்தே வாழ்வதுதான்! என்றனுமான் மாழ்கிமிகத்
தான்கலங்குஞ் சாலத் தவித்து. 3

அப்போ தரக்கர்க் கதிபன் தசமுகன்றன்
ஒப்பாந் துணைவியர்தம் மோடேகி—எப்பாடும்
மெய்க்காப் படரத்தான் மேவினனே மைதிலிபால்
எக்கே மனந்தன்னை வைத்து. 4

---

10. அங்கு ஒரு மரத்தடியில் சீதையை அனுமான் கண்டான். ஆங்கு அரக்கியர் ஆர் ஈட்டத்தில் என்று பிரிக்க. உள்ளம் (தனது உள்ளத்தை) நலிவுற நட்டு, அனுமான் கண்டான்.

1. அனுமான் ஒரு மரத்தில் ஒளிந்து கொண்டான். இராமன்—இரவுக்கு மன்னனாகிய. இந்து - சந்திரன். பாதவம்—மரம். 2. சீதையின் துன்பத்தைக் கண்டான். புன்கண்—துன்பம். அரிவை — பெண். தகவு — குணம். 3. அனுமானது கலக்கம். ஐயன்: தலைவன், இராமன். 4. அப்போது இராவணன் தனது மனைவியருடன் அங்குப் போந்தான், சீதையைக் காண. எப்பாடும்—நாலா பக்கங்களிலும். எக்கே!—அந்தோ! இரக்கக் குறிப்பு.

அலகிலதாங் கற்புக் கணியாகுஞ் சீதை
உலகினுக்காந் தாயெனவே யோரான்—கலனாம்
அரக்கனவன் தன்னரசுக் காவளென வுன்னி
இரக்கமிலான் கோரினனா லேசு. 5

சீற்றந் தனையொடுக்கிச் சீதை யவற்கிதமே
சாற்றித் தருமநெறி தானோதிக்—"கூற்றின்வாய்
சாராமல் வாழ்வாய்நீ" என்றா ளவன்மீண்டான்
தீராத சீற்றந் திணர்த்து. 6

அவ்வேந்தன் நீங்குங்கா லாங்கவ் வரக்கியரைச்
செவ்வேயம் மங்கைதனின் சிந்தைதனை—எவ்வோ
வகையாலும் மாற்றுவிரென் றேவினனே மிக்குத்
தகையாத சீற்றந் தழைத்து. 7

கோர வடிவினராய்க் கூற்றமுந் தான்நடுங்கத்
தீராச் சினங்கொள்வார் தெவ்வன்றி—ஓராதார்
வாளரக்கி மாரிவளை வாயாலுஞ் சைகையிலும்
கோளிழைத்தா ரந்தோ கொடிது! 8

எல்லிபகல் முற்று மிடையின்றி யிக்கொடியோர்
அல்லலதே சாற்றுவரால், "அம்மே! நீ—வல்லான்
இறைவனிவன் சொல்லேலாய் வாழ்வுதியோ? எங்கட்
கிரையாவாய் திண்ணமிதே" யென்று. 9

5. இராவணனுடைய தீய எண்ணம். ஓரான்—உணராதவனாகி. கலன்—தீயோன். ஏசு கோரினன்—எவராலும் இகழப்படுவதையே ஏற்றான்; விளைவு யாவராலும் இகழப்படுதல். 6. சீதை அவனுக்கு அறநெறியை உபதேசித்தாள். கூற்றின் வாய் சாராமல்—இராமனது அம்புக்கிலக்காகி மாளாமல். 7. இராவணன் அரக்கியருக்கு இட்ட ஆணை. தகையாத—போக்கப் பெறாத. சீற்றம் திணர்த்து—சீற்றம் திரண்டு அடர்ந்து. 7. அரக்கியர் சீதையைத் துன்புறுத்திய வகை. தெவ்—பகை. சைகை—கையால் குறித்தல். 9. சீதையின் துன்பம். எல்லி—இரவு. சாற்றுவர்—கூறுவர். ஏலாய்—ஏற்றுக் கொள்ளவில்லை.

சிந்தையொடு கண்ணுஞ் செவியிணையு மெந்நாளும்
நந்தலிலாத் துன்பத்தால் நைவுறவே—பந்தமற
வீய்தலலால் வேட்பதுதான் வேறிலையா லென்றிவளும்
சாய்ந்தனளே பாரில் தளர்ந்து. 10

### 4. சீதை கேட்ட சுபம்

வேந்தனுக்குப் பின்தோன்றல் வீடணனோர் சத்துவமே
வாய்ந்தநலன் தன்மகளை மாவனைய—ஏந்திழையாள்
சீதைக் கனுகூல மாயிருக்கச் செப்பினனே
பேதமிலா நெஞ்சொளிரப் பெற்று. 1

சாவத் துணிவுற்ற சானகிக்குக் கூறுமிவள்:
"தேவீ! துயரொழிப்பாய் சேமமுனக்—காவதுகாண்
கேட்பா யிரவிதனிற் கேழிற் கனவொன்று
வேட்பில் நிகழ்ந்த விளைந்து. 2

"நின்னன்பன் வெற்றியுற நேரானி ராவணனோ [யாய்!
தன்செல்வங் கெட்டுத் தரைக்கிடந்தான்—மின்னிடை
காகுத்தன் நின்னணைந்து காசினிக்குக் காப்பேற்றான்
மாகத்தார் வாழ்த்த மகிழ்ந்து." 3

அதுபோழ்து மாருதியு மாங்கிறங்கிச் செவ்விப்
பதந்தாழ்ந்து பாங்கிற் பகரும்:—"இதுகேட்பாய்
நின்னுயிராங் கேள்வன் நினையே நினைந்துருகும்
இன்னலிலை நிற்கோ வினி. 4

10. தன்னுயிரை முடித்துக் கொள்வதுதான் தக்கதென்று சீதை தீர்மானித்தாள். நந்தல்—குறைவு.

1. விபீஷணன் தனது மகளைச் சீதைக்கு அனுகூலமாக இருக்குமாறு கூறினான். மா—லஷ்மி. ஏந்திழை—பெண் 2. அவள் சீதையிடம் தான் கண்ட கனவைக் கூறினாள். கேழ்—ஒப்பு. வேட்பு—விருப்பம். 3. நேரான்—பகைவன். மாகத்தார்—வானிலுள்ள தேவர் காசினி—பூமி. 4. அப்போது அங்கு அனுமான் வந்து, சுபச்சொல் கூறினான். பதம் தாழ்ந்து—பாதத்தில் படிந்து வணங்கி. கேள்வன்—கணவன். இன்னல்—துன்பம்.

"அவற்காகுந் தூதனியான் நாம மனுமான்
அவற்காகு மன்பன் சுக் ரீவன்—நிவப்புடைய
வானரர்தம் மன்னனிவன் மற்று மிவனுக்கும்
யானவன்றன் னன்ப னமைச்சு. 5

"வானரர்தம் வாகினியோ வாரிதியின் மீப்பெருகிக்
கோனிவன்றா னேவக் குவிந்தனவே—நானோ
விரைவன் படையோடி ராமனுனை மீட்க
விரைவன் விசயம் விளைத்து." 6

"இக்கடலை நீகடந்த தெவ்வாறோ?" என்னவிவள்
மீக்குயரும் மாவுருவில் மாருதியோ—மிக்கிலங்க
நங்கை நயங்கண்டாள் பின்னையிவன் தன்னுருவில்
சங்கை யறநின்றான் தாழ்ந்து. 7

சானகியின் சங்கை தனைப்போக்கி வாயுசுதன்
தேனினிய செஞ்சொல்லாற் சீராமன்—மேனிவளர்
சோதியொடு கட்டழகுஞ் சொன்னயமு நாமனமும்
ஓதினனால் மேலு முவந்து. 8

நரரோடும் வானரர்கொள் நட்பின் நலனும்
அரிதோங்கு மார்வத் தடர்வும்—பரவைதனைத்
தான்கடந்து தூதாகத் தானங்கே சார்ந்ததுவும்
தேன்மொழிவாய்ச் செப்புமிவன் சீர்த்து. 9

5. அனுமான் தன்னை அறிமுகஞ் செய்து கொண்டான். நிவப்பு—மேன்மை. இவன் உகக்கும் யான் அவன்றன் அன்பன், அமைச்சு —. 6. வானரர் சேனை திரண்டிருப்பதை அனுமான் கூறினான். வாகினி—சேனை. வாரிதி—கடல். இராமன் படையோடு உன்னை மீட்க விரைவன். வெற்றி பகர்ந்து விரைவன். 7. சீதைக்குத் தான் கொண்ட பேருருவைக் காட்டினான் அனுமான். 8. அனுமான் பிராட்டிக்கு இராமனைப் பற்றிக் கூறினான். இராமனது மேனி, சோதி, கட்டழகு, சொல்நயம் இவை போன்றவற்றை விவரித்தான். 9. மனிதரோடு வானரர்க்கு நட்பு எவ்வாறு நேர்ந்தது என்பதையும், தான் கடலைத் தாண்டி வந்ததையும் அனுமான் கூறினான். அடர்வு—திண்மை. சீர்த்துச் செப்பும்—சிறப்புறக் கூறினான்.

அனுமான்ற னாற்றலெலாம் பாராட்டிச் சீதை
இனிதோதும்: "என்னோடி ராமன்—கனிவோடு
சேரும் வகைதன்னைச் சிக்கெனவே செய்வாய்நீ
ஆராய்ந் ததற்காவ தொன்று." 10

5. கணையாழி

"தேவீ! இதுகொள்வாய் சீராமன் கையாழி
ஆர்வத் துனக்கா வவன்விடுத்தான்—பாவாய்நீ
ஏற்பாய்" எனவோதி யீந்தா னிவட்கனுமன்
ஓர்ப்பாற் பெரிது முவந்து. 1

கண்ணீர் பெருகக் கலுழியென வைதேகி
எண்ணற் கரிதெனவே யேற்றதனை—அண்ணல்
அனுமானை வாழ்த்தியட ரன்பி லியம்பும்
மனமார வின்பம் வளர்ந்து. 2

"அன்றரசர் சேரவையி லென்னன்ப னார்வினிலே
மன்றிலரன் மாணார் வரிசிலையைக்—குன்றாத [திது
கொற்றந் திறுத்தென்னைக் கொண்டநாள் கொண்ட
வற்றா மகிழ்வளரத் தான்." 3

அங்குலியைத் தான்பூண்டோ ராக்கமென வச்செல்வி
மங்கைமணம் வாய்ந்த திருநாளில்—பொங்குபுகழ்த்
தாசரதி தானணைந்து சார்ந்ததனி யின்பத்தைத்
தேசடரச் சேர்த்தாள் மனம். 4

---

10. சீதை அனுமானிடம் வேண்டிக் கொண்டது. கனிவு—இரக்கம்.

1. இராமனது கணையாழியை அனுமான் சீதைக்குக் கொடுத்தான். ஓர்ப்பு—செயல் முடிக்குந் துணிவு. 2. சீதை அதை மகிழ்வுடன் ஏற்று, அனுமானை வாழ்த்தினாள். கலுழி பெருவெள்ளம். இயம்பும்—கூறினாள். சிவனது சிலையை முறித்துத் தன்னை மணந்து கொண்ட திருநாளில் தான் பெற்றது அம்மோதிரம் என்று கூறினாள். ஐயன்—தலைவன் ஸ்வாமி. மா மன்றில் அரன் வரிசிலையை இறுத்து, என்னைக் கொள்ளும் நாள், நான் கொண்டது. 4. முன்பு கொண்ட இன்பத்தை நினைத்தாள் சீதை. அங்குலி—மோதிரம். அச்செல்வி மங்கை, மணம் வாய்ந்த திருநாளில் என்று பிரிக்க, தேசு அடர—முகத்தில் சோதி பெருக.

ஆறாத துன்பகல வந்த வனுமானைப்
பாராட்டிக் கூறுமிவள்: "பாரிதனில்—தீரர்
உனையொப்பா ராருளரோ? உத்தமனே! உன்னால்
எனையைய னேற்ப னினித்து. 5

"பற்றாதார் பாலும் படருங் கருணையினன்
எற்றேயோ யேற்ப னெனை"யென்று—வற்றாத
அன்பினிலே சாற்றிப்பின் நங்கை யனுமானுக்
கின்பொளிரக் கூறினளா லீது. 6

"இதுவென்றன் சூடா மணியாகு மேந்தால்!
இதையென்ற னாருயிருக் கீந்து—மதிநல்லாய்!
கூறுவையென் துன்பமெலாம் கோளரி சிலையேந்து
மேறனையான் பாலே படர்ந்து. 7

"இன்னொருநா ளிங்கேநீ தங்குவையே லிஃதெனக்குப்
பன்னரிய பேரின்பம் பண்புடையோய்!"—என்னவிவள்
ஓது மனுமானும்: "ஒல்லேயுன் நாதன்றன்
பாதம் படிவேன் மகிழ்ந்து." 8

செல்விதனைச் சுற்றி வலம்வந்து செப்புமிது
வெல்லரிய வீரத் தனுமானும்:—"நல்லாய்!
விடையளிப்பாய் நின்காந்தன் மேவுமிவண் திண்ணம்
படையுடனே போரப் பரிந்து. 9

---

5. சிதை அனுமானைப் பாராட்டினாள். உன்னால் எனை (என்னை) ஐயன் இனித்து ஏற்பன். 6. இராமபிரானது கருணையைக் கூறித் தன்னை விரைவில் ஏற்பன் என்றாள். ஈது (இது) இன்பு அடரக் கூறினாள். 7. தனது சூடாமணியை அனுமானிடம் கொடுத்தாள். ஏந்தால்—சிறந்தவனே! கோள்—வலிமை, மிடுக்கு. ஏறு அனையான்— ஆண்சிங்கம் போன்றவன். 8. சிதை வேண்டிக் கொண்டது. அனுமான் பகர்ந்தது: விரைவில் இராமனைக் காண வேண்டும் என்று. 9. அனுமான் சிதையிடம் விடைபெற்றுக் கூறியது. காந்தன்—கணவன். போரப் பரிந்து மேவுவன்—உன்பால் மிகவும் பரிவு கொண்டு இங்கு வருவான்.

அரக்கர்தம் வீரமெலா மாராயு மார்வ
முறக்கொண்டு மாருதியோ ஒன்று—செருக்கினிலே
தான்துணிந்தான் அப்பொழிலை முற்றுந் தகைத்தரக்கர்
கோன்தனையே காணக் குறித்து. 10

## 6. மீட்சி

குன்றனைய கோளுருவைக் கொண்டனுமான் தன்கோ
வென்றிமிடுக் கார்த்து வியப்புக்காம்—தன்திறனு [மான்
மார்த்துப் பொழிலனைத்தும் நாசத் தகைத்தனனே
சீர்த்த விராமன்பே ரார்த்து. 1

மிக்கழன்று வேந்தன்தன் வீரர்க் கியம்புமிது:
"இக்கடிய வானரத்தை யிங்கென்பா—லிக்கணமே
சேர்ப்பீரா" லென்னத் திறலரக்கர் வீரரெலாம்
ஆர்ப்போடு பாய்ந்தனரா லாங்கு. 2

குலங்குலமா வீரரெலாங் கொல்லுண்டார் போரில்
சலங்கலவா மாத்தலைவர் தாமும்—கலங்கி
இலங்கைக்கோ னிந்திரசித் தாம்மகனை யாங்கு
வலங்கொள்ள ஏவும் மலைந்து. 3

பிரமாத் திரத்தாற் பிணித்தனுமான் றன்னை
வருமா கதத்தந்த மன்ன—னருகே
விடுத்தனனே வென்றியுடன் வீரப் புதல்வன்
கடுத்தமுகங் காட்டிக் கனன்று. 4

---

10. அனுமானது விருப்பம் : இராவணனை நேரில் காண்பது. செருக்கு - ஆணவம்.

1. பேருருவில் அனுமான் பொழிலை நாசஞ் செய்தான். கோள்—வலிமை. அகைத்தான்—முறித்தான். 2. இது கேட்டு இராவணன் விடுத்த ஆணை, அழன்று—சினந்து. ஆர்ப்போடு—ஆரவாரத்துடன். 3. இந்திரசித்தை இராவணன் ஏவினான். சலம் கலவா—கபடமில்லாத; சஞ்சலம் கொள்ளாமல் போர் செய்யும். வலம் கொள்ள—வெற்றியுடன் மீளுமாறு. 4. பிரமாத்திரத்தால் இந்திரசித்து அனுமானைக் கட்டி இராவணன் முன்னர் விடுத்தான். வரும் மா கதத்து. கொண்ட கொடிய கோபத்தால். வியன்திறல்...செல்வன்—யாவரும் வியக்குமாறு வீரப்பாடுடைய இந்திரசித்து.

சீற்றத் துரகமெனச் சீறு மிராவணனாங்
கூற்றுங் குலையவிது கூறினனே—காற்றின்
புதல்வன்: "இராமனிடம் பொன்னிதனைச் சேர்ப்பாய்
பதமுறவே யெண்ணிப் பணிந்து." 5

தூதனையோ கோறல் துவளாச் சமுக்கமென
மூதறியும் வீடணன் முன்னோத—ஓதினனால்
வேந்தன் விதித்து, "விலங்கிதுதான் வாலிலே
ஏந்தத் தழலுய்ப்பீர்" என்று. 6

வாலடரும் வன்னிதனை மாநகரி லெங்கெங்குங்
கோளடர வீசிக் குலைத்தனுமான்—வாலிழையை
மீண்டு மடிபணிந்து மீண்டான் கடலதனைத்
தாண்டிக் கரைசேரத் தான். 7

வெற்றி தனைமுழக்கி மேனி தனைப்பெருக்கி
முற்றுங் கடந்தனனே முந்நீரை—வற்றா
விறலா னனுமானும் மீவிரைந்து நின்றான்
திறலார் தலைவரிடம் சார்ந்து. 8

"கண்டேன் தலைவிதனைக் கண்டே னிலங்கையிலே
கண்டே னடிபணிந்தேன் காண்மி" ரென—ஒண்டொடி
சானகிதான் தந்த மணியை யிராமற்குத் [யாள்
தானளித்தான் தாதன் களித்து. 9

---

5. இராவணனுக்கு முன் அஞ்சாமல் அனுமான் கூறியது. உரகம்—பாம்பு. இராவணன் ஆம்கூற்றும் குலைய—யமன் போல் யாவரையும் நடுங்கச் செய்யும் இராவணனும் மனங் கலங்குமாறு. பொன்னி—பிராட்டி, லக்ஷ்மி போல் சிறந்தவள். 6. விபீஷணன் கூறியது: தூது வந்தவனைக் கொல்லுவது தகாது என்று. சமுக்கம்—குற்றம். துவளா—வாடாத, மறையாத. வாலில் தழல் ஏந்த உய்ப்பீர் என்று—7. அனுமான் செய்தது. வன்னி—தழல். கோள்—துன்பம். வாலிழை—சீதை. 8. விறலான்—வலிமையுடைய. 9. இராமனிடம் அனுமான் கூறியது: கண்டேன் சீதையை. ஒண்தொடியாள்—பெண், சீதை. தொடி—கைவளை. தாதன்—தாஸன்; அடியான்; அனுமான். மணி—சூடாமணி.

தன்னகத் தம்மணியைத் தானணைத்துத் தாசரதி:
"என்னகத் தின்னமுதே!" என்றார்த்தான்—
["என்னுயிரே!
வாரா" யெனவோதி மாருதியை மார்வகத்தே
ஆர வணைத்தான் புகழ்ந்து.

---

*10. அம்மணியை இராமன் மகிழ்வினில் ஏற்றுத் தன் மார்பில் அணைத்தான். அனுமானையும் அணைத்துத் தழுவினான். அகம்—மார்பு. புகழ்ந்து—அவனது செயலைப் பாராட்டி.*

# யுத்த காண்டம்

## 1. கடற் கரை

தென்பாற் படர்ந்ததுவே சீற்றமொடு வானரர்தம்
வன்மாப் படைதானும் பாரெங்கும்—துன்போதத்
தூசும் பரந்தடரச் சோர்வின்றி வெற்றியெனும்
பூச லடரப் பொழிந்து 1

இராகவ சுக்ரீவர்க் கேவெற்றி யென்று
தராதலந் தாக்கித் தமரம்—பராவப்
படைவீரர் சாற்றிப் படர்ந்தார் பகைஞர்
படைவீடும் நையப் பதைத்து 2

ஊழிப் பெருவெள்ள மோருருவே தானாகி
ஏழின் பதின்மடங்கா மித்தானை—ஆழி
கலிப்பதெனத் தான்கலித்துக் கார்க்கடல்பால் பாய்ந்த
சலிப்பறியா வூக்கந் தழைத்து. 3

மந்தியொடு காருகமும் வானரமு மெண்கினமும்
தந்தமொடு கூருகிருந் தாக்குதற்காம்—நந்தாப்
புயவலியும் வாய்ந்த படையாகப் போந்த
சயவொலியே சாற்றி விரைந்து. 4

1. வானர சேனை கடற்கரையை அடைந்தது. வன் மா—படை—வலிமையுடைய பெரும்படை. துன்பு ஓத—துன்பம் வந்ததே என்று அஞ்சுமாறு. பூசல்—பேரொலி. பொழிந்து - கல்மழைபோல், அடர்த்து. 2. இராம சுக்ரீவர்க்கு வெற்றி என்று முழக்கிச் சென்றது. இப்படை. தராதலம்—பூமி. தாக்கி—அதிரச்செய்து. தமரம்—ஆரவாரம். படை வீடு அதிர- படை வீட்டிலுள்ள வீரர் அதிர்ச்சி கொள்ளுமாறு. 3. சேனையின் பரப்பு. ஏழின் பதின்மடங்கு—எழுபது வெள்ளம். வெள்ளம் என்பது சேனையின் அளவு. ஆழி—கடல். 4. சேனையிலுள்ள வீரர். மந்தி—ஒரு வகைக் குரங்கு. காருகம்—கருங் குரங்கு. எண்கு—கரடி. இவற்றிற்குப் படை: ஆயுதம்: தந்தம் (பல்), கூர் உகிர் (கூர்ந்த நகம்), புயவலி,

பலர்பலரோ கோளரியிற் கோளடர்க்கும் பாங்கர்
பலர்பலரோ வாரணத்தின் வாய்ந்த—வலிவலரால்
ஓங்க லினம்வீசி யொன்னார் கணங்களெலாம்
ஏங்க எதிர்ப்ப ரெளிது. 5

அங்கதனுஞ் சாம்பவனும் வீர னனுமானும்
பொங்கும் புரிவின் நளநீலர்—பங்கமிலாக்
கொற்றங்கொள் மேலர் குவிந்தனரே தானைக்கண்
ஒற்றித்தம் வென்றி யொலித்து. 6

கடலருகில் மூன்னனுகிக் கண்ணுற்றுத் தாண்டக்
கடவவகை யொன்றே கருதி—மிடல்வல்ல
ரவ்வீரர் தம்முள்ளே யாய்ந்தடர்ந்து நோக்கினரே
அவ்விரைக் காகுங் கரை. 7

பரவையினும் மீப்படர்ந்து கூலத்தின் பாலே
பரவியவத் தானை தனைப் பார்த்துப்—புரிவினிலே
காகுத்த ரவ்விருவர் கார்முகத்தை நாணேற்றிப் 8
பாகுய்த்துக் காத்தார் படிந்து.

சேனை நிரைவகுத்துச் செவ்வே தலைவரெலாம்
வானி வனைந்தடர மானவர்தங்- கோனோடுந்
தங்கோன் தனையுங் கருத்தோடு காத்தனரே
தங்கி வளைத்தவரைத் தாம். 9

5. வீரர்களின் வலிமை. பலர் சிங்கத்தின் வீரம் வாய்ந்தவர். கோளரி—மிடுக்குள்ள சிங்கம். சிலர் யானையின் வலிமை வாய்ந்தவர். வாரணம்—யானை. ஓங்கல்—மலை. ஒன்னார்—பகைவர். பாங்கு—தகைமை. 6. தானையின் தலைவர். மேலர்—சிறந்தோர். ஒற்றி—ஒற்றுமையாக. 7. கடலை எவ்வாறு கடப்பதெனச் சிந்தை செய்தனர் வீரர். அவ் விரை—அந்தக்கடல். 8. பரந்த அந்தச்சேனையைக் காகுத்தர் இருவரும் வில்லுங் கையுமாகச் சுற்றி வந்து காத்தனர். கார்முகம்—வில். பாகு உய்த்து—தலைமை ஏற்று. 9. சேனையிலுள்ள வீரர்கள் படைத்தலைவரைக் காத்து வந்தனர். வானி வனைந்து அடர—கூடாரங்களை எங்கும் அமைத்து.

பதின்மூகன்ற னொற்றர் பரவையதன் பாலே
பொதிதருமத் தானைப் பொலிவால்—மதிகுலைந்து
வேந்தனிட மோதினரால் வெய்துற்றே யவ்வரக்க
ரேந்தலுமே யேங்கினனாற் கேட்டு. 10

## 2. விபீடணன் விருப்பம்

அரக்கர் முதுவோரை யாங்கவையிற் கூட்டிப்
பரக்க நிருபன் பகரும்—குரக்கினங்கள்
வெள்ளமென மேவியதை வெற்றிக்காச் செய்வவெலாம்
உள்ளியுணர் விப்பா னுலைந்து. 1

இதமுரைத்து மூத்தோரவ் வேந்திழையை யன்னாள்
பதியிடத்துச் சேர்ப்பதுதான் பான்மை—கதியெதுவும்
வேறிலதா லென்றோத வேந்தன் சிறிதேனுந்
தேறகிலன் சீற்றஞ் செறிந்து. 2

அஞ்சலிலை யென்றா ரவர்குயிராம் வீரரொடு
மெஞ்சலிலாப் போர்வல்ல புத்திரனும்—வஞ்சமிலான்
வீடணனோ கூறுமிது: "வேந்தேகேள் நின்செயலோ
தூடணத்திற் கேயாந் துடுக்கு. 3

"மைதிலியை யன்னாள் மணாள னுழிசேர்ப்பாய்
தையுறுமா லென்னுள்ளம் நின் நினைந்து—செய்வாயோ
நின்னரசும் நீயும் நிலமிதனில் நீடொளிர
மன்னவகை கொண்டுன் மனத்து. 4

10. இராவணனின் ஒற்றர் அந்தச் சேனையைப் பார்த்துக் கலங்கி அவனிடம் கூறினர். பொதிதரும் அத்தானை—திணிந்துள்ள அந்தச் சேனை. வெய்துற்று—துன்பமுற்று.

1. இராவணன் சபையைக் கூட்டி வெளியிட்டது. நிருபன்-அரசன். உலைத்து வருந்தி. 2. மூத்தோர் கூறியது. ஏந்திழை—பெண்; சீதை. 3. சிலர் அஞ்ச வேண்டா என்றுரைக்க விபீஷணன் கூறியது. எஞ்சல் இலா...புத்திரன்: இந்திரசித். துடுக்கு—தீச்செயல். தூடணம்—ஏச்சு. 4. விபீஷணன் விளக்கிக் கூறியது. நின் நினைந்து—உன்னுடைய நிலையை உணர்ந்து. நின் அரசும்...மன்ன வகை மனத்துக் கொள்வாய்: எப்போதும் வாழும் வகையே நினைப்பாய்.

மாள்விலதாஞ் சீற்றமுடன்: ''மாற்றானே நீயானாய்
கேளிதுநீ யெற்கில்லை கேட்டுக்காங்—கோளே
விரும்புதியால்'' என்றானவ் வேந்தன், இவனோ
அரும்புதுயர் கொண்டா னலந்து. 5

தாரமொடு மக்கள் தனமனைய த்ானகற்றி
வாரமொடி ராமன் மலரடியே—சேருவதா
மெண்ணமதால் வான்பா லெதிர்நின்று வானரர்க்குத்
திண்ணெனவே ஓதுமிவ னோர்ந்து. 6

''இதங்கூறு மென்னை யெனதைய னென்னே
கதங்கூறிக் காய்ந்தகற்றுங் காணேன்—எதுவு
மெனக்காவ தெல்லாமும் நீத்தே னிராம
னெனக்காவ னெல்லா மு மென்று. 7

''இந்நொடியி லென்னை யிராமன்தாட் சேர்ப்பீரே
என்னிறைவ னெற்காம் புகலுமிவன்—மன்னுயிர்கட்
கெல்லா முயிராகி யீடில் புகலிவனோ
எல்லே யுயிராவ னெற்கு.'' 8

ஆவலிலே சுக்ரீவ னன்ப னிராமனிடம்
''மேவலன்றன் பின்தோன்றல் வீடணன்—மேவுவனே
நின்னைச் சரணாக நேர்வதுதான் [நானறியேன்
என்னே!'' எனப்பகர்ந்தான் தாழ்ந்து. 9

---

5. இராவணன் சீறிக் கூறியது: நீ எனக்குப் பகைவன் என்று. விபீஷணனது வருத்தம். அலந்து—துன்புற்று. அரும்பு துயர்—வளரும் துயர். 6. யாவற்றையும் துறந்து இராமனைப் பற்றுவதாக ஆகாயத்தில் நின்று கூறினான். ஓர்ந்து—இராமனது பண்பை உணர்ந்து. 7. இவன் கூறியது: இராமனே எனக்கு எல்லாமுமாவான் என்று துணிந்தேன். எதுவும் எனக்காவது காணேன்—எல்லாவற்றையுந் துறந்தேன். 8. இந்நொடியில் என்னை இராமனிடம் சேர்ப்பீர் என்றான் விபீஷணன். ''ஸர்வலோக சரண்யாய'' (வான்மீகி). 9. சுக்ரீவன் இதை இராமனிடம் விண்ணப்பஞ் செய்தான். மேவலன்—பகைவன். நேர்வது_இவனை ஏற்றுக் கொண்டால் என்ன விளையுமோ என்பது.

வீடணனைக் கண்டாங்கே வீர ரினங்கலங்கத்,
"தேடரிய சீலனிவன் சேமமென—நாடு
மிவனை யழைப்பதுதா னென்துணிவா மென்றான்
பவனன் புதல்வன் பரிந்து. 10

3. சரணாகதி

சொல்லு மிராமனும் சுக்ரீவ ராதியர்க்கு,
"நல்லீர்! இவனென்பால் நாடினனே—செல்வன்
இவனெற்கா மன்பன் இதுவென்ற னெண்ணம்
இவனென்பாற் சேருவதே யென்று. 1

"கவலை மிகக்கொண்டீர் காப்பே கருதி
எவரு மெனையணுகி லேற்பன்—தவறிழைப்பார்
என்கை விரல்நுனியா லெல்லே முடிவுறுவர்
என்னே அறியீரோ விஃது?" 2

வானிற் பதற்றமுடன் மன்னும் விபீடணனைத்
தானோர் பரிவினிலே சுக்ரீவன்—தேனினிய
சொல்லாலே தானேற்றுத் தூமனத்த காகுத்தன்
நல்லான்முன் சேர்த்தான் நயந்து. 3

தன்னருகே கைகுவித்துச் சாரும் விபீடணனைத்
தன்மடியி லுய்த்துத் தழுவியெழு—மன்பில்
மகவுதனைத் தாய்போ லிராம னணைத்து
மிகவுகந்தான் பாசம் மிளிர்ந்து. 4

10. விபீஷணனை ஏற்றுக்கொள்ளலாம் என்று அனுமான் கூறினான். பவனன்—வாயு.

1. தனது விருப்பத்தை இராமன் வெளியிட்டான். 2. இவர்களது கவலையை இராமன் தீர்த்தான். தவறு இழைப்பார்—எனக்குத் தீங்கு செய்பவர். கைவிரல் நுனியால்: அங்குள்யக்ரேண (வான்மீகி) 3. சுக்ரீவன் விபீஷணனை இராமனிடம் அழைத்துச் சென்றான். 4. இராமனது பரிவு. இராமன் காட்டிய அன்பு. தாய் தனது மகவிடம் காட்டுவதொப்பு. மகவு—குழந்தை. பாசம் மிளிர்ந்து—பேரன்பு மிக விளங்க.

"அன்பா! இதுகேட்பாய், அல்லை அரக்கனினி
அன்பி னுடன்தோன்ற லாவாய்நீ — துன்ப
மினியில்லை என்னுடனே வாழ்வாய்நீ" என்றான்
தனியன்பில் தாசரதி யேற்று. 5

தலைவரெலாம் முன்னழைத்துத் தாசரதி யோங்கு
மலைகடல்பா லெவ்வா றணையே—உலைவின்றிக்
கட்டுவதென் றாராய வீடணனோ கூறுமிது
சிட்டமதா மொன்று தெளிந்து. 6

"சரணா கதியொன்றே சான்றோர் வரைவர்
அரணாங் கடலிதனை அன்பா!—சரணாக
நீயடைவாய்" என்றோத நேமத்தி ராகவனும்
ஆயவகை செய்தானா லாய்ந்து. 7

பரவைமுன் தர்ப்பை பரப்பியதன் பாலே
பரவியிவன் சாரச் சரணாப்—பரவையிறை
முன்தோன்றி, "நீநளனைக் கொண்டணையை முன்
என்றோதி நின்றா னினித்து. [னமைப்பாய்" 8

கல்லோலத் தார்கலியிற் காளை நளனமைக்க
அல்லோல கல்லோலத் தாலடர்ந்து—கல்லோடு
கான்மரங்கள் பெய்து கடக்கவணை கட்டினரே
வானரங்க ளூக்கமெழ லாய்ந்து. 9

5. இராமன் கூறியது : நீ அரக்கன் அல்லை; எனக்குத் தம்பி. 6. கடலைக் கடக்க எவ்வாறு அணை கட்டுவது என்று யாவரும் கலங்க, விபீஷணன் கூறியது. உலைவு—அச்சம், கேடு. சிட்டம்—சிறப்பு, ஒழுக்கம்; பெரியோர் ஆதரிப்பதாற் சிறப்புடையது. 7. கடலைச் சரணமாகப் பற்ற வேண்டும் என்றான் விபீஷணன், தான் செய்த சரணாகதி பலித்ததால். நேமம் செய்யும் வகை. 8. கடலின் முன்னே இராமன் சாய்ந்து கடலைச் சரணாகப் பற்றினான். பரவி-வணங்கி. பரவை இறை—வருணன். வருணன் கூறியது: நளனைக் கொண்டு அணையைக் கட்டுக. 9. அணையை வானரங்கள் அமைத்தன. கல்லோலம்—அலை. ஆர்கலி—கடல். அல்லோல கல்லோலம்—ஆரவாரம். கல்—மலை. பெய்து—குவித்து.

குரக்கின் குலங்களெலாங் கோளடர்த்துத் தாவி
நெருக்கி நெடுங்கடலின் தென்பால் - அரக்கர்கோன்
வாழ்நகரி னெல்லையிலே மண்டிக் கலித்தனவே
ஆழ்கடலே யொப்ப வடர்ந்து. 10

## 4. இராவணன் வஞ்சகம்

அந்நகரின் முன்ன ரணிவகுத்தார் தானைதனைக்
கன்னவிலுந் தோளார் கருதரிய—வன்மக்
கவய நளரும் கவாக்க னனையார்
அவியா வலியுடையா ராய்ந்து. 1

ஒற்றர் சுகசா ரணரிருவ ரோதம்போல்
வெற்றி கலித்து வெளியடரும்—பற்றலர்தம்
ஒப்பில் திரளதனை யோத இராவணனும்
வெப்புற் றுயிர்த்தான் மெலிந்து. 2

வெளியுற்ற தானை வெகுண்டுள்ளே பாய
உலைவுற்று மாற்றார் றுலைக்க—அலைவுற்றே
அங்காங்கு மற்போ ரடர்ந்ததுவே யந்நகரில்
எங்கெங்கும் பூச லெதிர்த்து. 3

வானரர்தஞ் சேனையினும் மிக்கடர்ந்த வாளரக்கர்
தானையெலாங் கூடிச் சலிப்பின்றி—வானதிரப்
போர்செய்ய மாயம் புணர்ப்பான் பதின்முகத்தான்
ஓர்புன்கண் நாடினனே யோர்ந்து. 4

---

10. குரங்குப் படை நகரின் வெளிப்புறத்தில் அடர்ந்து பேரொலி செய்தது. கோள்—கொலை, வலிமை.

1. படைத்தலைவர் படையை அணிவகுத்தார். வன்மம் - வலிமை. கல் நவிலும் தோளார்—திண்ணிய தோள்கள் வாய்ந்த தலைவர்: கவயன், நளன், கவாக்கன் போல்வார். 2. சுக சாரணர் என்ற ஒற்றர் இருவர் இராவணனிடம் வானர சேனையைப் பற்றிக் கூறியது. இது கேட்டு இராவணன் துன்பமுற்றான். உயிர்த்தான்— பெருமூச்செறிந்தான். 3. குரங்குப் படை உள்ளே புகுந்தது. ஆங்காங்கே மற்போர் நிகழ்ந்தது. உலைக்க—துன்புறுத்த. 4. அரக்கர் சேனை வானர சேனையுடன் கடுமையாகப் போர் புரியும்போது, இராவணன் ஒரு வகையில் துன்பம் விளைவிக்க நினைத்தான். புன்கண்—துக்கம்.

சிரமொன் றிராமன் சிரம்போ லமைத்து
விரவும் விருப்பினிலே வேந்தன்—விரைவினிலே
சானகிக்குக் காட்டியதைச் சாற்றினனே, "நின் கணவற்
கானகதி காண்பாயா லிஃது. 5

"கரனுக் கிவனானான் காலனென் றெண்ணிப்
பரவ மனத்திற் படுத்துப்—பொருவிலனோர்
தேவாகத் தேர்வுற்றாய் தேறுவைநீ இன்றிவன்றான்
ஆவானோ நின்வாழ்வுக் கா?" 6

"ஆவென் னருப்புகலே! நீபிரிந்தா யாகமிதோ
ஆவென் சிதறவிலை அன்பேநீ—மேவியிவண் [றும்
என்சிரமும் நின்சிரத்தோ டொற்றுவையோ?" என்றறற்
இன்னலிலே துள்ளி யிவள். 7

அருகிருந்த நல்லா ளரக்கி சரசை
உருகியுளந் திண்ணெனவே ஓதும்:— "வெருவுறலென்
மாயமிது நீயறிவாய் வாழ்கின்றான் நின்கேள்வன்
ஆயதிறன் முற்று மடர்ந்து." 8

அவ்வமயம் வானரர்தா மார்த்தனரே வெற்றியொலி
செவ்வே யிராமன் சிலையொலியும்—தெவ்வர்தம்
ஓதையிலுமோங்கியதால் ஒண்ணுதலாள் நோவொழிந்து
பேதற்றுப் பெற்றாள் திடம். 9

---

5. இராமனது சிரம்போல் ஒன்று அமைத்து, அதைச் சீதைக்குக் காட்டினான் இராவணன். 6. இராவணன் கூறியது: இனி இவன் உனக்குக் கதியாவானோ? பொருவிலன் ஓர் தேவாக—ஒப்பில்லாதவனாய், ஒரு தெய்வமாக. 7. சீதை துன்பத்தில் அலற்றியது. ஆகம் இதோ—உன்னை எப்போதும் வைத்துள்ள இந்த நெஞ்சம். உரற்றும்—பேரொலியில் அழுதாள். 8. அருகிலிருந்த சரசை என்னும் அரக்கி இவளைத் தேற்றினாள்: இது மாயம்; உன் கொழுநன் உயிருடனே வாழ்கின்றான். வெருவுறல் என்?—ஏன் அஞ்சுகிறாய்? 9. அப்போது வானரர் வெற்றி ஒலித்தனர். சீதை தரித்து நின்றாள். தெவ்வர்—பகை. ஓதை—பேரொலி. பேது அற்று—மயக்கமில்லாமல். திடம்—மனவுறுதி.

"சீதையையி ராமனிடஞ் சேர்ப்பாய்நீ" என்றிதமே
நீதிவலர் தாமோத நீப்பின்றிப்—பேதமெழக்
கோமான் செருக்கிக் கொலையடரும் போரொன்றே
ஆமென் றடர்த்தா னகத்து. 10

## 5. நாக பாசம்

இந்திரசித் தென்பா னிணையில்லா மாயத்தன்
மைந்தனர சற்கரிய வஞ்சகத்தால்—வித்தையென
வென்றிகொள அங்கதன்பால் மேவினனே மற்போரில்
மின்றிகழும் வில்லை வளைத்து. 1

நாகக் கணையெய்தான் நண்ணார் நலியவென
ஆகத் தடர்த்திவனோ ஆங்கடர்ந்தார்—மோகத்
தயர்வுற்றா ராரக் களைத்தனரே யாங்கே
மயர்வுற்றார் காகுத்தர் காண். 2

ஒன்றலர்தந் தானை யொடுங்கித் தலைவருடன்
ஒன்றியுணர் வின்றி யுலைவுறலைச்—சென்றங்கே
சானகிதன் கண்ணாலே காணத் தசக்ரீவன்
தானவவு கொண்டான் குறிப்பு. 3

அன்னாள்தன் காவ லரக்கிய ராங்கவளைப்
பொன்னாரும் புட்பகத்தில் தாமுய்த்தார்:-"நின்னாதன்
வாழ்விதுவே கா"ணென்றார் மைதிலியுங் கண்டழு
"வாழ்விழந்தேன்" என்றே மலைத்து. [தாள் 4

10. சீதையை இராமனிடத்துச் சேர்ப்பாய் என்று பெரியோர் கூறியும், இராவணன் போர் ஒன்றையே விரும்பினான். அகத்து ஆர்த்தான்—உள்ளத்திற் கொண்டான்.

1. இந்திரசித்து அரசற்கு மைந்தன்;—அங்கதனோடு போர் புரிந்தான்; மின் திகழும் வில்லை வளைத்து, மேவினன். 2. நாகக் கணை—நாகபாசம் என்பது, நாகமயமாகிக் கட்ட வல்லது. ஆங்கு அடர்ந்தார் மோகத்து அயர்வுற்றார்—மோகித்துக் கலங்கினர். 3. இதனைக் காண்பிப்பதற்குச் சீதையைப் புட்பகத்தில் ஏற்றிச் செல்ல ஆணையிட்டான் இராவணன். அவவு—விருப்பம். 4. சீதை சித்தஞ் சிதைந்து கலங்கினாள். மலைத்து—திகைத்து, மயங்கி.

தன்னுயிரே யின்றித் தடக்கை யிளவலொடு
துன்னுபடை வீரர்களும் சோர்வுற்றோ— ரின்னலிலே
பார்தழுவிச் சாய்ந்திருப்பப் பார்த்தந்த மெல்லியலாள்
ஓர்துயரத் தாழ்ந்தா ளொசிந்து. 5

வெய்யிலிலே கீடம்போல் வெம்பித் துடிதுடிக்கும்
தையற்குச் சாற்றும் திரிசடையோ—"மெய்யிதுகேள்
பொன்னே! விமானமிதிற் போந்து பொருந்துநரோ
துன்பமுறா" ரென்றாள் தொழுது. 6

தெளிய மனஞ்சிறிதி ராமனுமங் கேகி
இளவல் நிலையைக்கண் ணேற்றான்—உளமுருகி, [வோ
"எம்பியுனைப் போலொருவன் எங்கேநான் காண்பது
அம்புவியி" லென்றா னிளைத்து. 7

ஆங்கு விரைதந்தார் வீடணனும் மாருதியும்
ஏங்கப் படையி னிறைவரெலாம்—ஓங்கி
உயர்விண்பால் தெய்வ உவணன் பறந்தான்
அயர்வெல்லாம் மாய்க்க வடுத்து. 8

இளவல் விழித்தெழுந்தான் ஏனையமா வீரர்
தெளிவி லெழுந்தனரே, தேச—னிளவலையக்
காகுத்தன், "வாழ்வாய்நீ கண்பெற்றேன்" என்றோதி
ஆகத்துச் சேர்த்தா னணைத்து. 9

*5. சீதை அங்குக் கண்டது: இராமன், இலக்குமணன், சேனைத் தலைவர் யாவரும் மயங்கித் தரையில் படுத்திருந்தனர். 6. சோகத்தால் சீதை துடித்தாள். கீடம்—புழு. திரிசடை அவளைத் தேற்றியது: இந்தப் புட்பக விமானத்தில் ஏறிப் பொருந்தியிருப்பார்க்குத் துன்பமே இராது. 7. இராமன் இலக்குமணனைக் கண்டு மனமுருகிக் கதறியது. எம்பி!—என் தம்பியே! உன்னைப்போல் ஒரு தம்பி இவ்வுலகில் எங்குக் காண்பேன்? 8. அவ்விடத்திற்கு அனுமானும் விபீஷணனும் வந்தனர். ஆகாயத்தில் கருடன் வட்டமிடக் கண்டார் இவர். களைப்பெல்லாம் நீங்குமாறு மேலே பறந்தான், கருடன். 9. இலக்குமணனும் படைவீரர்களும் விழித்தெழுந்தனர். தம்பியை இராமன் அன்புடன் தழுவினான். கண் பெற்றேன்—கண் போன்ற உன்னைப் பெற்றேன்.*

ஒன்னா ருயிர்த்தெழுந்த தோர்ந்து கடுஞ்சினத்தால்
மன்னன் பிரகத்த னாம்வீரன்—றன்னை
முனைக்கேவ அன்னான் முடிவுற்றான் கோமான்
மனக்கேதத் தாழ்ந்தா னயர்ந்து. 10

## 6. இராவணன் எய்த சக்தி

நேரார் விழித்தெழவும் நெஞ்சம் நிலைகுலைந்து
போருக் கெழுந்த விராக்கதர்தாம்—பாரடரக்
கொற்றங் குவிப்பான் குவித்தனரே தானையெலாம்
வெற்றி யொலியே யொலித்து. 1

வேந்தற் கருந்துணையாய் வென்றிக் குறைவிடமாய்
வாய்ந்த வலிமிக்க மாவீரர்—போந்தனரே
கம்பனன்போல் தீரர் பலரும் கடுகவவர்
வெம்பிமிக வீய்ந்தா ரெதிர்த்து. 2

கண்கள் கனலெறியக் காய்ந்து தசமுகனோ
நண்ணார் முனை நாடி நாராசம்—எண்ணிலதாம்
வேகத்து வீசினனே வீரர் நடுவுற்ற
காகுத்தர் தம்பாலுங் காய்ந்து. 3

வெற்றி பறைந்தெதிர்த்த வீர னிலக்குவன்பால்
செற்றந் திணித்தொரு சக்திதனை—அற்றம்
விரும்பிப் பதின்முகத்தான் வீச இளவல்
வெருண்டு விழுந்தா னிளைத்து. 4

---

10. இராவணன் பிரகத்தனைப் போர் முனைக்கு ஏவினான். பிரகத்தன் மாண்டான். ஒன்னார்—பகைவர். முனை - போர் முனை.

2. அரக்கர் சேனைகளைக் குவித்தனர். நேரார்—பகைவர். கொற்றம் குவிப்பான்—வெற்றி மேல் வெற்றியாகப் பெறுதற்கு. 2. கம்பனன் போன்ற வீரர் போரில் இறந்தனர். இவர் கடுக (விரைவில்)வீய்ந்தார்—இறந்தார். 3. இராவணன் தானே போர் முனைக்குச் சென்று அம்புகளை எய்தான். கனல்—அனல், அழல். நாராசம்—அம்பு. வீரர் நடுவில் நின்று போர் செய்த காகுத்தர் மேலும் கணைகளை எய்தான். 4. இலக்குமணனைக் குறித்து சக்தி என்ற கணையை எய்தான் இராவணன். இலக்குமணன் மயங்கி விழுந்தான். வெருண்டு—மயங்கி. அற்றம்—அழிவு, கேடு, துன்பம்.

ஆங்கவ் வனுமா னிளவல் தனைச்சுமந்து
பாங்கி னிராமன்முன் சேர்த்திடவும்—ஓங்கும்
மகிழ்வி லெழுந்தா னிளவல் கணையோ
நெகிழ்வி லிழந்ததே யேற்பு. 5

இராவணனை நோக்கி யிராமன் கணைகள்
உராவவெனப் பெய்தரவு மொற்கம்—விராவப்
பதின்முகத்தான் கைசலித்துப் பாங்கிலனாய் மீண்டான்
விதியிதுவே யென்று விதிர்த்து. 6

நெடுநாள் துயில்பயிலுந் தம்பி நிகரில்
மிடலான் வியன்கும்ப கர்ணன்—கடுக
விழித்தெழச் செய்து விளம்பினனே வேந்தன்
தெழித்தடரும் போரின் திறன். 7

முன்னோன் கழல்வணங்கி யன்னான் மொழியுமிது:
என்னே! செயலிதுதான் ஏறனையாய்!—இன்னாதால்
பாதகமே யென்றாலும் பாசத்தால் நிற்கெனவே
போதுவனான் போர்க்கே முனைந்து. 8

குன்றன்ன காயத்தான் கும்பகர் ணன்தோன்ற
ஒன்றாது வீரரெலா மோடினரே—மின்னன்ன
புங்க மிராகவனு மேவ இராக்கதன்றன்
னங்கம் பிளந்ததுவே யிற்று. 9

---

5. அனுமான் இலக்குமணனைச் சுமந்து இராமனிடம் சேர்த்தான். இலக்குமணன் நலிவின்றி எழுந்தான். கணை—ஏற்பு இழந்தது- இராவணன் எய்த சக்தி, தனது வலிமையை இழந்தது. 6. இராமன் கணைகளை வீச, இராவணன் சலித்து மீண்டான். உராவ—பட. ஒற்கம்—தளர்ச்சி. விராவ—நிகழ, 7. கும்பகர்ணனை எழுப்பிப் போரைப் பற்றிக் கூறினான் இராவணன். மிடல்-வலிமை. 8. கும்பகர்ணன் கூறியது. இன்னாது-விரும்புவதன்று. நிற்கெனவே-உனக்கு உதவுவதற்காக. 9. கும்பகர்ணன் வீழ்ச்சி. காயம்—உடல். ஒன்றாது—பொருந்தாமல். புங்கம்—அம்பு. இராகவன் ஏவ—தொடுத்து வீச. அங்கம் இற்று பிளந்தது.

அரக்கர் கணங்கட்கோ ராதாரந் தாமாஞ்
செருக்கன் திரிசிரசு தெவ்வ—ருருக்குக்காம்
மாகாய மாபார்ச்வ னன்னார் மடிந்தனரே
மாகாய வானரரால் நைந்து. 10

## 7. பிரமாத்திரம்

வெந்திறலான் வேந்தன்சேய் மாயம் மிகவல்லான்
இந்திரசித் தாங்கே இடரெல்லாம்—நைந்தகலப்
போர்க்குப் படர்ந்து பொழிந்தனனே புங்கங்கள்
ஆர்க்க வரியின் குலம். 1

பிரமப் பெயர்கொண்ட புங்கம் பெயரா
அரியின் படைமுன்ன ருய்த்தான்—உறுவல்பெய்
யுள்ளத்தா னிந்திரசித் ஒன்னார் படையாய
வெள்ளந்தான் நைய விதிர்த்து. 2

இராமனொடு தம்பியுமங் கேங்கி மயங்கிச்
சராசனமுந் தாழ்த்துத் தரையில்—விராமமதே
கொண்டு கிடக்கத் தலைவரெலாங் கூடியவண்
மண்டித் துவண்டனரே சோர்ந்து. 3

சார்ந்தங் கனுமாற்குச் சாம்ப னிதுமொழிந்தான்:
ஆர்ந்த திறலோய்! அனுமானே!—சேர்ந்தங்
கிமயத்திற் சஞ்சீவி மூலிகையைத் தேடிக்
குமையிதற்குக் கொள்வாயா லிங்கு. 4

---

10. அரக்கர்களுள் வீரம் மிக்க திரிசிரசு, மாகாயன், மாபார்ச்வன் போல்வார் போரில் மடிந்தனர். செருக்கன்—ஆணவமுடையவர். மாகாய—பருத்த உடல் வாய்ந்த.

1. வேந்தனது மைந்தன் இந்திரசித் போர்க்களத்தில் தோன்றினான். சேய்—மகன். அரியின் குலம் ஆர்க்க—குரங்குகள் அஞ்சி, அலற. 2. பிரமாத்திரத்தை இவன் எய்தான். பெயரா—போர்க்களத்தை விட்டு நீங்காமல் போர் செய்யும். அரி—குரங்கு. உறுவல்—துன்பம். படை ஆய வெள்ளம்—வெள்ளம் போல் படர்ந்த படை. 3. இராமனும் இலக்குமனனும் மயங்கிக் கிடந்தனர். விராமம்—இளைப்பாறுகை; ஓய்வு. சராசனம்—வில்; தலைவர்களது கவலை. 4. அனுமானிடம் சாம்பன் என்பவன் கூறியது. குமை இதற்கு—இந்தத் துன்பம் தீருவதற்காக.

"அஃதுய்க்குங் காற்றாலே ஆறு மலக்கணெலாம்
எஃதுறுவ திண்ணமிதே" என்றோத—வெஃகலிலே
பத்தனனு மானும் படர்ந்தனனே கொண்டுவர
மெத்தவியன் மூலிகையை யேற்று. 5

சஞ்சீவி மண்டியாதங் கோடொன்றைச் சார்ந்தினோ
பஞ்சேபோற் பேர்த்துப் படர்ந்தனனே—மஞ்சேபோல்
ஆர்த்திறங்கி யுய்த்தனனே யக்குவட்டைக்காற்றெங்கும்
போர்த்ததுவே பாரிற் பொலிந்து. 6

சஞ்சீவிக் காற்றங்குச் சார்தரலுந் தானைபால்
எஞ்சாம லெங்குமுயிர் மீண்டதுவே—கஞ்சம்போற்
கண்மலர்ந்தார் காகுத்த ரேயின்றிப் போர்முனையின்
கண்ணடர்ந்த வீரர் கலித்து. 7

பாவகனிற் காயும் பகைமூண்டு வானரரோ
மேவிநகர் தன்னுள்ளே வீதியெலாம்—பாவவென
வெந்தழலை யுய்த்துப்பின் மீண்டும் பொருதனரே
வந்தடர மாற்றார் வளைத்து. 8

நேரார்க்குக் கம்பனமே நேர்விக்குங் கம்பனனும்
போரேறாம் யூபாக்கன் பொய்யாத—பேராற்றல்
மைந்தனொடு கும்ப நிகும்பர் வலியிழந்து
நைந்துமடிந் தாராற் பொருது. 9

5. அம்மூலிகையின் இயல்பு. அதன் காற்றாலே அலக்கண் (எல்லாம்) துன்பங்கள் யாவும். எஃகுறுவ—துண்டிக்கப்படும். வெஃகல்—விருப்பம். மெத்தவியன் மூலிகை—மிகவும் வியக்குமாறு சக்தி வாய்ந்த மூலிகை. 6. கோடு—சிகரம். மஞ்சு—மேகம். குவடு—சிகரம். காற்று, பாரில் போர்த்து (எங்கும் பரவியது). 7. இந்தக் காற்று பரவியதால் விளைவு. எஞ்சாமல்—குறையாமல் கலக்கம் தெளிந்தது தோன்றுமாறு. போர் முனையின் கண் அடர்ந்த வீரர், கலித்து (பேரொலி செய்து) கண் மலர்ந்தார்—கண் விழித்தெழுந்தனர். 8. இவ் வீரர் செய்தது. பாவகன்—சூரியன். பாவ—பரவ. 9. எதிர்த்த வீரர்கள் : கம்பனன், மைந்தன், யூபாக்கன், கும்பன், நிகும்பன், நேரார்—பகைவர். கம்பனம்—நடுக்கம்.

மேவி வளநகருள் வெந்திறலின் வானரங்கள்
ஓவா துலைவிழைக்க உம்பர்வாய்—தேவர்
கணமொடுக்கித் தெவ்வெங்குங் காணாத வேந்தும்
அணவினனா லாராத் துயர். 10

## 8. இந்திரசித் வதம்

புல்லார் கணங்குலைப்பான் பொல்லா மகமொன்று
வல்ல வகையில் வனையவென—நல்ல
பொழுதொன்று நோக்கினனா லிந்திரசித் போரில்
பழுதின்றி வெற்றி குறித்து. 1

வானரர்தந் தானை வகுத்துச் சமர்புரிதற்
கானதிறல் மாருதியு மஞ்சவெனச்—சானகியே
போலுருவ மொன்றைப் புகக்காட்டிப் போர்வாளால்
கூறுறவே கொன்றா னிவன். ௨

வைரங் கவித்திவனோ கூறுமிது: "மாருதியும்
வைரி கவியரசும் மாவீரன்—ஐய
னிராமனையு மன்னா னிளவலையும் வீய்த்தே
விராமமே யேற்பன் விரைந்து." 3

"கொடியோய்! அறமிதுவோ கூறுவைநீ பெண்ணை
மிடலிலே வெட்டுவதோ? வெய்தா—மடல்செய்தாய்
இன்றுன்னை வீழ்த்துவனான்" என்றார்த் தனுமானும்
சென்றனனே சீராமன் பால். 4

10. வானர்கள் உள்ளே புகுந்து துன்பமிழைக்க, இராவண னும் துயர்கொண்டான். உம்பர்—ஆகாயம். தெவ்—பகை. ஆரா துயர் அணவினன்—ஆராத துன்பமுற்றான்.

1. இந்திரசித் வேள்வியொன்று செய்ய விரும்பினான். பகைவர்களை அழிக்க. புல்லார்—பகைவர். மகம்—வேள்வி. 2. அனுமானும் அஞ்சுமாறு கொடியதொன்று செய்தான். சீதையைப் போன்ற உருவமொன்று அமைத்து, அதைத் தன் வாளால் வெட்டினான். 3. பின்பு இவன் ஆர்த்தது : யாவரை யும் அழித்திடுவேன் என்று. வைரம்—பகை. வைரி—பகைவன். விராமம்—ஓய்வு. 4. அனுமான் இவனைக் கடிந்தது. மிடல்—பகை. அடல்—கொல்லுவது. வெய்தாம் அடல்—கொடியதான கொலை.

சிந்தை சிதைந்து செயலெதுவுந் தேறாமல்
முந்தி யனுமான் முதுவோனும்—வெந்திறலான்
தாசரதி மாடணுகித் தான்சொல்லுந் தாபத்தைக்
கூசிமிகக் கூறுங் குலைந்து. 5

"என்னுயிரே யாமிவட்கா யந்தோ இதுகாறும்
பன்னரிதாம் பாசத்தால் மூண்டதுபோர்—அன்னமிவள்
எற்பிரிந்தாள் போரிதுவோ என்"னென்றான் தாசரதி
சொற்கடந்த துன்பிற் துடித்து. 6

வீடணனோ மேவி விரைந்து விளம்பினனே:
"தேடருமோர் வீரா! திடங்கொள்வாய்—கேடெதுவும்
உன்றன் மனைக்கில்லை உன்னுள்ளம் பாழாக்கி
வென்றி விரும்பி யிவன், 7

"ஒல்லா ரெவராலு மோய்தலிலாத் திண்டிறலை
எல்லே மிகவிரும்பி வேள்விதனை—வல்லவகை
செய்வான் நிகும்பிலையிற் சென்றிவனை நீமாய்ப்பாய்
நையப் புடைத்து நலிந்து." 8

முன்னோன் பதம்படிந்து மொய்ம்ப னிலக்குமணன்
வென்றி தனைமுழக்கி மேவினனே—ஒன்னான்
மகமியக்குஞ் சாலையிலே மற்றவனைச் சாடி
இகலழித்தான் வேள்வி யிறுத்து. 9

5. அனுமான் இராமனிடஞ் சென்று, நிகழ்ந்ததைக் கூறினான். தாசரதிமாடு—இராமனிடம். 6. இராமன் துயருற்றுக் கூறியது: இனி இப்போர் எதற்கு என்று... இப்போர் இவளைப் பெறுதற்காக மூண்டது. எற் பிரிந்தான்—என்னிட மிருந்து பிரிந்தாள். துன்பு- துன்பம். 7. அப்போது விபீடணன் இராமனைத் தேற்றிக் கூறியது. உன்றன் மனைக்கு—சீதைக்கு. 8. பின்னும் கூறியது : இவன் கொடியதொரு வேள்வியைச் செய்கிறான்; அதற்கு இடையூறு காணாதவாறு இங்ஙனே செய்தான். ஒல்லார்—பகைவர். 9. இலக்குமணன் தானே சென்று அவனைக் கொல்லுவதாக இராமனிடத்துக் கூறியது. பதம்—திருவடிகள். மொய்ம்பன்—வலிமை வாய்ந்த. வேள்வி இறுத்து. இகல் அழித்தான்—வேள்வியை முறியச் செய்து, வலிமையை அழித்தான்.

ஐய னருநெறியோ டாண்மை யிவையோதி
வெய்ய கணையிளவல் வீசுதலும்—மெய்குன்றி
வீய்ந்தனனே இந்திரசித் வென்றிக்காம் வேள்வியதும்
ஓய்ந்ததுவே முற்று முலைந்து. 10

## 9. இராவணனுடன் போர்

இலக்குவனை யாகத் தினிதணைத்தி ராமன்,
"கலக்கமிலா வெம்போர்க் களிறே!—உலைக்ககிலா
உம்பர்கோன் வீர முலைத்தொளிரு மோரரியை
மொய்ம்பொழித்தா" யென்றான் மகிழ்ந்து. 1

கணைதூவிக் காகுத்த னெங்கெங்குங் காய்ந்து
பணியாத வொன்னார் படையைப்—பணியத்
தகைத்துத் தரையிற் சவங்குவித்தா னெங்கும்
மிகைத்துப் படர மெலிவு. 2

எல்லி பகலெங்கு மின்பக்கோ லாகலமே
மல்கி வளம்படரும் மாநகரில்—அல்லலிலே
ஓல முலவியதா லோரி கழுகினங்கள்
ஆலித் துலவ வடர்ந்து. 8

தன்னாணை யொன்றே தழைத்தோங்கு மாதரவில்
தன்னோடே யொன்றித் தனக்குயிராய்—வென்னே
மிகக்குவித்தார் வீய்தரவும் வேந்தன் தனித்து
மிகக்கரைந்தா னுள்ளம் மெலிந்து. 4

---

10. இராமபிரானது அறநெறி, ஆண்மை முதலியவற்றை ஓதி, இலக்குமணன் கணையைத் தொடுத்தான். இந்திரசித் அழிந்தான். "தர்மாத்மா" என்ற சுலோகம் ஒப்பு நோக்கு.

1. இராமன் தம்பியை யணைத்துப் பாராட்டியது. உம்பர்கோன்—இந்திரன். 2. இராமன் கணை வீசி அரக்கர் கணங்களைக் கொன்றான். மெலிவு மிகுத்துப் படர.... சவங் குவித்தான். 3. இலங்கையில் ஓலமே அடர்ந்தது. ஓரி—நரி. ஆலித்து—முழக்கி. 4. இராவணனது பெருந்துயரம். தன் ஆணை....ஆதரவில் - தனது ஆணைப்படி யாவரும் நடந்து கொண்டதால். வென்—வெற்றி. மிகக்குவித்தார் : படைத் தலைவர். கரைந்தான்—துன்பமுற்றான்.

அமைச்சர் தமையேவிப் போர்புரிய வாங்கே
குமைக்கக் குரக்கினத்தைக் கோமான்—இமைப்பில்
சமர்புரியத் தானுந் தலையேற்றுப் புங்கம்
தமரலெழப் பெய்தானாற் சார்ந்து. 5

விருபாக்க வீர மகோதரரை வீர
சொருபனாஞ் சுக்ரீவன் மாய்த்தான்—அருபமே
யாக்கினனா லங்கதனோ மாகாயன் றன்னோடு
மீக்கிளர்ந்த வீரரையும் வீய்த்து. 6

இராவணன்பாற் காகுத்த னேபொழிய நேரார்
இராவணமே மற்றவனு மெய்தான்—அராவனைய
வெங்கணைகள் வீடணன்பால் வீசிப்பின் னேவினனே
வெங்கணையாஞ் சக்தி வெகுண்டு. 7

சரங்க ளொருமூன்றாற் சக்திதனைத் தாக்கி
உரங்கொண் டிளவ லொடுக்கத்—தரங்கொண்ட
சக்திபிறி தொன்றங் கிலக்குவன்பால் தாவியதே
எத்திசையு மேங்க விருண்டு. 8

அசைவற்றுக் கீழ்விழவே யவ்வீரன் முன்னோன்
அசைவற்று நைவி லரற்ற—விசையின்
சுடேணனோ சஞ்சீவிக் கேவுமனு மானை
விடாயதனை வீய்க்கவெனத் தான். 9

---

5. இராவணன் அமைச்சரைப் போர் புரிய ஏவினான். குமைக்க—அழிப்பதற்கு. தலை ஏற்று—தலைமை ஏற்று. தமரல்—பேரொலி. புங்கம்—கணை. 6. சுக்ரீவன் செய்தது: விருபாக்கன், மகோதரன் என்ற அரக்கர் வீரரை மாய்த்தான். அங்கதன் செய்தது: மாகாயனையும் அவனுடன் வந்த அரக்கரினத்தையும் அருபமே ஆக்கினான்—அழித்தான். 7. இராவணன் சிறிச் சக்தியை விபீடணன்பால் ஏவினான். நேரார் இராவணம்—பகைவர் அழியுமாறு. ஏவுகணை 8. இலக்குமணன் இந்தச் சக்தியின்வலிமையை ஒடுக்கினான். இதனினும் கொடிய சக்தியை இராவணன் இலக்குமணனைத் தாக்க ஏவினான். 9. இலக்குமணன் அசைவற்று விழ, இராமனது துயரம். சுடேணன் சஞ்சீவி கொண்டு வருமாறு அனுமானை வேண்டிக் கொண்டான். விடாய்—களைப்பு.

சஞ்சீவிப் பூண்டாங்குச் சார இலக்குவனும்
"அஞ்சாதீர்" என்றெழுந்தானன்போங்க—மஞ்சனைய
வண்ணனி ராமன் மனங்களித்தான், "வாழியவென்
கண்ணேநீ" என்றான் களித்து, 10

## 10. இராவண வதம்

தன்னுயிரின் மிக்கினிய தம்பி யிலக்குவனைத்
தன்னகத்தி ராமன் தழுவினனே—"என்னுயிரே!
நின்னனைய தம்பி நினைக்க வலனோ நான்?"
என்றிதுவே கூறி யினித்து. 1

பாருலையப் போர்புரியும் வீரர் படைதாங்கும்
வீரனொரு காளையோ முன்நிற்பத்—தீரன்
இராவணனும் மாழ்கினனே எய்தான் கணைகள்
பராவியிடத் தானையதன் பால். 2

தேரொன் றிராமற்குத் தேவேந் திரனனுப்ப
ஆர்வொன்ற வஃதேறிக் காகுத்தன்—சோர்வின்றி
வெங்கணைகள் வென்றிகொள வீசுந் தசமுகன்பாற்
புங்கமழை பெய்தான் முனிந்து. 3

வீரங் குலைதரவும் வேந்தன் பதின்முகத்தான்
தேரைத் திருப்பினனே சாரதிதான்—ஆரக்
கடிந்தவனை வேந்தன் களத்தூர்ந்து மீண்டும்
தொடர்ந்தனனே போரத் துடித்து. 4

*10. இலக்குமணன் கலக்கந் தெளிந்து எழுந்தான். இராமனது களிப்பு.*

*1. இராமன் தன் தம்பியைப் பாராட்டியது. அகம்—மார்பு. 2. இராமனைக் கண்டு இராவணன் மயங்கி அம்புகளைச் சேனையின் மேல் எய்தான். உலைய—நடுங்குமாறு. பார் பாரிலுள்ளோர். பராவியிட—பரவுமாறு 3. இந்திரன் அனுப்பிய தேரிலேறி இராமன் போர் செய்தான். ஆர்வு ஒன்றி—ஆர்வத்தில். புங்க மழை : "சரவர்ஷம்." 4. இராவணன் சிறிது களைப்பது கண்டு, சாரதி தேரைப் பின்னே திருப்ப, இராவணன் அவனைக் கடிந்து, மீண்டும் போர் செய்யத் திரும்பினான். துடித்து—வெற்றி கொள்ள வேண்டுமென்று,*

தண்டோ டுலக்கைகணை சக்தியொடு வேலனைய
விண்டார் படவீச வேந்தனவன்—திண்டிறலான்
தாசரதி துண்டித்தான் தாக்கச் சரம்பெய்தே
ஆசதிர ஆரவா ரித்து. 5

காகுத்தன் வெய்ய கணைவிசப் பாய்ந்ததுவோர்
வேகத்தில் வேற்றான் சிரம்பிரிந்து—தேகத்தில்
ஒட்டாமற் பாரி லுருண்டதுவே செந்நீரோ
குட்டம்போற் தேங்கக் குமிழ்த்து. 6

மீண்டுஞ் சிரந்தோன்ற மீண்டுஞ் சரம்பாய்ந்த
யாண்டுஞ் சிரங்குவிந் தார்ந்தனவே—வேண்டி
மனுவோதிக் காகுத்தன் நான்முகப்பேர் வாளி
தனையேவி னானொன் றான் பால். 7

கூற்றமு மெண்ணிக் குலையும் கொடுந்திறலான்
மாற்றா னகத்திலவ் வன்கணையோர்—சீற்றத்திற்
பாய்தரவும் பார்புரப்பான் பாரிற் புரண்டனனே
ஒய்தரவே யன்னா னுயர்வு. 8

வானரர்தங் கோனோடு மாருதியு மங்கதனும்
மானதிறற் சாம்பவனும் வீடணனும்—வானதிர
வாழ்த்தினரே வாகை வனைந்த பெருவீரன்
கேழிலி ராகவனைச் சூழ்ந்து. 9

5. இராவணன் எய்தவை : தண்டு (கதை), உலக்கை, கணை, சக்தி, கைவேல் இவை போல்வன. ஆசு அதிர—திசைகளிலுள்ள தேவர் அஞ்சி ஆரவாரிக்க. 6. இராமனது அம்பு செய்தது : தலையைப் பிரித்தது. வேற்றான்—பகைவன். செந்நீர்—உதிரம். 7. தலைகள் மேலும் மேலும் தோன்ற, கணைகள் மீண்டும் மீண்டும் பாய்ந்தன. நான்முகப்பேர் வாளி—பிரமாத்திரம். 8. கூற்றம்—யமன். இராவணனது திறல் : யமனும் நினைந்து நடுங்குவான். பார் புரப்பான்—பாரைக் காப்பவன். அன்னான் உயர்வு ஒய்தர—. 9. இராமனை யாவரும் பாராட்டினர். வாகை வனைந்த—வெற்றி கொண்ட. கேழ்—ஒப்பு.

ககனமடர்ந் தும்பர் கணங்களெலாந் தங்கள்
பகைகுலைத்த காகுத்தன் பண்பும்—புகலரிய
தீரமு மார்த்துத் திசையெங்குஞ் சாற்றினரே
வீரனி ராமன்கொள் வென். 10

## 11. விபீஷண பட்டாபிஷேகம்

அரக்கர் குலங்கட் கதிபதியாய்க் கொற்றம்
பரக்கக் குவித்த படியில்—செருக்க
னிராவணற்காச் செய்யவெலாம் வீடணனே செய்தான்
விராவவே வேத முழக்கு. 1

சத்துவமும் மூதறிவுஞ் சான்றோர்பால் மிக்கடரும்
பத்தியொடு மாண்பும் பரந்ததனி—வித்தகமும்
வாய்ந்த விபீடணனை மன்னாக்கக் காகுத்தன்
ஏய்ந்த புரிவினிலே யேற்று, 2

வானரரும் வல்லரக்கர் தங்கணமும் வாழ்த்தொலிப்ப
வானமரு மண்டர் மலர்பெய்யக்—கோனெனவே
சிங்கா தனத்திருத்திச் சீரார் முடிசூட்டி
மங்கா மகிழ்வுற்றான் வாய்ந்து. 3

போரில் மடிந்து புவிபால் நிரைநிரையா
யார்ந்த குரக்கினங்க ளார்த்தனவே—ஆருயிர்தாம்
பெற்று மகவான்றன் பேரருளால் மாவீரர்
முற்றும் மகிழ்ந்தனரே மொய்த்து. 4

---

10. வானத்தில் அமரர்கள் இராமனைப் பாராட்டினர். வென்—வெற்றி.

1. இராவணனுக்கான ஈமக் கடன்களை விபீஷணன் செய்தான். கொற்றம்—வெற்றி. வேத முழக்கு விராவ—வேத கோஷத்துடன்; செய்வன குறைவின்றி. 2. விபீஷணனுக்கு இராமன் முடி சூட்டினான். வித்தகம்—சிறந்த ஞானம். 3. யாவரும் விபீஷணனை வாழ்த்தினர். அண்டர்—வானவர். இராமன் மங்கா மகிழ்வுற்றான் : ''ப்ரமுமோத ஹ'' (வான்மீகி). 4. இந்திரனுடைய அருளால், போரில் மாய்ந்த வானரர் உயிர்த்தெழுந்தார். மகவான்—இந்திரன். மாவீரர் மொய்த்து, முற்றும் மகிழ்ந்தனர்.

தன்னுயிராஞ் சானகிக்குத் தன்விசயஞ் சாற்றவென
அன்பனனு மானை யனுப்பினனே—தன்னிகரே
யில்லாத் திறல னிராமன் இகலழித்த
தெல்லா மியம்புகவே யென்று. 5

நாதன் விசயத்தால் நங்கை மிகமகிழ்ந்தாள்
ஓதற் கரிதா முதவிதனை—நாதற்
களித்த அனுமானைப் பாராட்டிக் கைம்மா
றளிக்கும் வகைகாணா ளாய்ந்து 6

பொற்சிவிகை யொன்றூர்ந்து பொங்கி வதனத்தில்
கற்புக் கனல்பரவக் காரிகையோ—மற்புயத்த
மாவீரன் தாசரதி யின்பால் மலர்விழிகள்
மேவலிலே யுய்த்தாள் விரித்து. 7

விண்வாய் மகவானும் வேதாவுஞ் சங்கரனு
மண்ணவல் தயரதனு மாங்குற்று—நுண்ணிடையாள்
சீதையையுஞ் செல்வ ரிருவரையும் வாழ்த்தினரே
ஓதியுலை வில்லாதோ ரன்பு. 8

ஆண்டு பதினான்கு மந்நாள் முடிவுறவே
மீண்டு பரதன் தனைக்காண—வேண்டலிலே
காகுத்தன் தன்நகரே மீளுங் கருத்தேற்றான்
ஆகத்தோ ரன்பே யடர்த்து. 9

5. சீதையிடம் வெற்றியைக் கூறுமாறு இராமன் அனுமானை அனுப்பினான். 6. சீதையின் மகிழ்ச்சி. வெற்றிக்காக உதவிய அனுமானுக்குக் கைம்மாறு யாது என்று ஆய்ந்தாள், சீதை. 7. பொற்சிவிகையில் ஊர்ந்தாள் சீதை இராமனைக் காண்பதற்கு. இராமனது வீரப் புயங்களைத் தனது கண்களாற் கண்டு மகிழ்ந்தாள். மேவல்—விருப்பம். 8. ஆகாயத்தில் தேவர்கள் திரண்டனர். மகவான்—இந்திரன். வேதா—பிரமன். சங்கரன்—பரமசிவன். ஓதி உலைவில்லாத ஓர் அன்பால் வாழ்த்தினர். உலைவு—வாட்டம். 9. பரதனைக் காண்பதற்கு உடனே மீளவேண்டுமென்று இராமன் விரும்பியது. வேண்டல்—விருப்பம்.

சுக்ரீவ னாதியருந் தூயோன் விபீஷணனும்
மிக்கார்வங் கொண்டனரே காணவெனச்—சொர்க்கம்
கட்டார்ந்த மாநகரிற் காகுத்தன் தானேற்கும் [போற்
பட்டாபி டேகப் படர்வு. 10

## 12. வளநகர் புகுதல்

தம்பி பரதன் தனைவிரைவிற் காணவெனச்
செம்ம லிராகவன் சிந்தைகொள—அன்பன்
அரக்கரிறை புட்பகத்தை யாங்குய்த்தான் சோதி
அருக்கனினும் பாய வடர்ந்து. 1

நங்கையொடுந் தம்பியொடும் நம்பியிரா மன் முன்னம்
பொங்கியடர் சோதியிலே புக்கமர—அங்கடரப்
புக்கார்த்தார் வானரர்தாம் பூத்த குதூகலத்தில்
சுக்ரீவன் சொல்லால் மகிழ்ந்து. 2

சுக்ரீவ வீடணருந் தோன்ற லனுமானும்
புக்கார்வில் தோய்ந்து பணிசெய்யத்—தெக்கி
லெழுந்துயர்ந்த தவ்வூர்தி வெய்யோன்தே ரென்ன
அழுந்தநில மெங்குஞ் சிறுத்து. 3

தன்வரவைத் தம்பிக்குச் சாற்றவென மாருதியை
முன்பனுப்பி மோனன் பரத்வாசன்—பொன்னம்
பதம்வணங்கக் காகுத்தன் பண்ணவனும் வாழ்த்து
விதிவயினே கூறும் விழைந்து. 4

---

10. சுக்ரீவன் முதலோர் அயோத்தியில் பட்டாபிஷேக வைபவத்தைக் காண விரும்பினர். கட்டு—உறுதி. அரண்—கட்டடம்.

1. பரதனை உடனே காண இராமன் விரும்பியதால் விபீஷணன் புஷ்பகத்தை அங்குக் கொணர்ந்து நிறுத்தினான். புஷ்பகத்தின் சோதி, அருக்கனினும் அடர்ந்து பாய—. 2 சீதை, லக்ஷ்மணன், ராமன் அதில் புக்கமர, சுக்ரீவனது ஆணையால் அதில் வானரங்கள் அமர்ந்து ஆர்த்தன. 3. இராமனது அருகில் அமர்ந்து பணிந்தவர்: சுக்ரீவன், விபீஷணன், அனுமான். அவ்விமானம் தெற்கில் எழுந்து உயரே பறந்தது. எங்கும் நிலம் சிறுத்து அழுந்த—நிலம் முழுதும் சிறுத்துத் தோன்ற. 4. பரதனிடத்துத் தன் வரவைக் கூறுமாறு இராமன் அனுமானை அனுப்பி, பரத்துவாச முனிவரை அடிபணிந்தான். விழைந்து—விரும்பி.

'வாழியநீ மங்கையொடு வெய்யோன் வழிவந்த
பாழித்தோட் கோளரியே! பாரிதனை—கேழில்
திறனடரக் காப்பாய்நீ செல்வமோ டின்பம்
செறிதரவே யாண்டுஞ் சிறந்து." 5

நந்திக் கிராமத்தில் நம்பி பரதனொடும்
மந்திரிமார் மெய்யர் மறையோரும்—வந்தடர்ந்து
மங்கையொடு காகுத்தர் தம்மை மகிழ்ந்தேற்றார்
பொங்கநிக ரில்லாப் புரிவு. 6

மின்னணையும் மேகம்போல் மின்னிடையாள் வைதேகி
தன்னுடனே கார்வண்ணன் தாசரதி—தொன்னகரஞ்
சேரத் தளிர்த்ததுவே யெங்குந் திரண்டொளிரப்
பாரிற் படர்ந்ததோ ரின்பு. 7

அன்றொருநாள் தாமிழந்த வானந்தம் மீண்டதென
மன்றுமறு கெங்கனுமே மாந்தரினம்—ஒன்றிப்
பரவையென வாழ்த்தொலித்த பாரடர அன்பாம்
பரவையிலே ஆழப் படிந்து. 8

பறையுந் துடியும் பணவமொடு காளங்
கறங்கிக் கடல்தனினும்: "கோவே!—மறங்குலைத்தாய்
இன்றெங் குறைகுலைப்பா னேகினையால் வாழியநீ
என்றேபோ லார்த்தனவே யேற்று. 9

---

5. பரத்துவாச முனிவன் வாழ்த்தியது. பாழி-வலிமை. யாண்டும்—எங்கும். 6. நந்திக்கிராமத்தில் இம்மூவரையும் வரவேற்றமை. மெய்யர்—முனிவர். நிகர் இல்லாப் புரிவு பொங்க—ஒப்பில்லாது பேரன்பு பொங்கி வளர. 7. இராமன் அயோத்தியுட் புகுந்தது. மின்னுடன் கூடிய மேகத்தால் நலம் பெருகுவது போல அயோத்தியில் ஓர் இன்பு படர்ந்தது, இது தளிர்த்தது. 8. வீதிகளில் மாந்தர் கூடிக் கொண்ட பேரின்பம். அன்பாம் பரவையிலே ஆழப் படிந்து—இராமனிடங் கொண்ட அன்பாகிய பெருங்கடலிலே ஆழ்ந்து மாந்தர் வாழ்த்து ஒலித்தனர். 9. எங்கும் வாச்சியங்கள் முழங்கின. பெருமானே! மறங் குலைத்த நீ, எங்கள் குறை குலைக்க மீண்டாய்! நீ வாழி.

மலரு மகிழ்புஷையும் மட்டியநற் சாந்தும்
நிலவி மணம்பரப்ப மல்கிக்—குலவும்
மகிழ்வினிலே காகுத்தன் மாநகருட் புக்கான்
திகழ்தரவே செங்கதிரின் தேசு. 10

## 13. இராம பட்டாபிஷேகம்

அன்னையர்தந் தாள்வணங்கி யாசா னடிபணிந்து
பொன்னொளிருஞ் சேர்விற் புகுந்தனனே-தன்னுயிராந்
தேவியொடுந் தம்பியொடுஞ் சீராமன் மாந்தரொடு
தேவகணம் வாழ்த்தத் திரண்டு. 1

சீதையொடு சீராமன் செம்மணிப் பீடத்திற்
சோதிபெய வீற்றிருப்பத் தூமறையோர்—காதலெழ
வாழ்த்த வனைந்தனனே பட்டாபி டேகமதை
வாழ்த்தி வசிட்டன் மகிழ்ந்து. 2

நான்முகனார் நல்கு நவமணிமா மௌலிதனை
வானவரும் மண்ணவரும் வாழ்த்தொலிப்பக்—கோனாம்
இராமற்குச் சூட்டினனே தூயோன் வசிட்டன்
குராமலரார் மாலை வனைந்து. 3

ஏமத் தவிசி லிலங்குவீ ராசனத்திற்
சேமம் செறிந்தடரச் சீதையொடு—வாமத்
திருவுருவி ராமன் திகழ்ந்தனனா லெங்கும்
பொருவிலதா மின்பம் புணர்த்து. 4

---

10. சூரிய வமிசத்தின் சோதி வாய்ந்த இராமன் வளநகரிற் புகுந்தான், செங்கதிர்—சூரியன். தேசு—ஒளி.

1. இராமன் தன்னுடைய பவனத்திற் புகுந்தான். சேர்வு—வாழுமிடம், அரண்மனை. யாவருந் திரண்டு வாழ்த்தப் புகுந்தான், 2. செம்மணிப் பீடம்—பொற் பீடம்; பட்டாபிஷேகத்திற்கான பீடம் 'ரத்ந—மயமான பீடம்'' என்றார் வான்மீகி. ஓதம்—கடல். வனைந்தான்—முறைப்படி செய்வித்தான். 3. மௌலி—கிரீடம். குராமலர் மாலை—மணம் பொருந்திய மாலைகள். 4. ஏமத் தவிசு—பொன் மயமான இருக்கை. சேமம்—இன்பம். வாமம்—அழகு. எங்கும் இன்பம் புணர்த்து—எங்கும் இன்பமே படரச் செய்து.

வெண்குடையை மேற்கவித்து வெண்சா மரையியக்க
எண்ணரிதா மின்பி லிலக்குமணன் — அண்ணல்
பரதன்தன் தம்பியொடும் பன்னரிதாந் தொண்டு
விரதமெனக் கொண்டான் குறிப்பு. 5

சுக்ரீவ விடணருஞ் சூழ்ந்தடர்ந்த மன்னவரும்
தக்கோருஞ் சாற்றச் சயவொலியே—மிக்கார்ந்து
வானகத்தில் தேவரெலாம் வாச மலர்பொழிந்தார்
கோனவன்றன் கொற்ற மிசைத்து. 6

பத்த னனுமான் பரமான போகமெனச்
சித்தஞ் சிறந்தொளிரச் சீராம —வித்தகன்றன்
பாதத்திற் றோய்ந்து பலவாக வாழ்த்துவனே
நாதத்தில் நாம மியைத்து 7

பல்லியமும் பண்ணிசையும் வாழ்த்தும் படர்ந்தடர
மல்லல் வளநகரில் மங்கையொடுஞ்—செல்வன்
இரகுகுலத்தி னேந்த லிருநிலத்தின் காப்புக்
கொருநலனா யுற்றா னொளிர்ந்து. 8

சீராமன் செல்வத் திருநாமந் தன்னோடுஞ்
சீராமன் சீரும் பரவியதே—சீராம
னேயாகிப் பார்முழுது மின்புற்ற சீராமன்
கோவாகிக் கோலோச்சுங் கால். 9

5. தம்பிமார் மூவர் செய்த தொண்டு. விரதம்—நோன்பு. 6. சுக்ரீவன், விபீஷணன், குறுநில மன்னர் யாவரும் சயவொலி சாற்றத் தேவர்கள் மலர்மாரிபொழிந்தனர். வாசம்—பரிமளம். 7. பக்தன் அனுமான் உகக்குந் தொண்டு: பாதத்திற் படிந்து நாமங்களை நாதத்தில் இயைத்துப் பாடுவான். 8. பாரைக் காப்பதற்கென இராமன் முடி சூடிய போது வாச்சியங்கள் ஒலித்தன; பண்ணடர்ந்த பாடல்கள் எங்கும் இயங்கின. மல்லல் - அழகு. ஏந்தல்—சிறந்தோன். 9. எங்கும் இராமபிரானது நாமமே அடர்ந்தது. ''ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநா மபவந் கதா:'' என்பது ஒப்புநோக்கு. ''ராமபூதம் ஜகதபூத்''.

கோசலையின் செல்வற்குக் கொற்றச் சிலையேந்துந்
தேசினற்குச் சீதை மணாளற்குக்—காசினியிற்
பொங்குபுகழ்ப் புண்ணியற்குப் பொங்குகவே நாணா
மங்கலமாம் வாழ்த்தே மலிந்து. [ளும் 10

10. இராம பிரானுக்கு மங்களம். கொற்றம்—வெற்றி, வன்மை. தேசினன்—சோதி வாய்ந்தவன். காசினி—பூமி. நாள் நாளும் மங்கலமாம் வாழ்த்து மலிந்து பொங்குக.

# அனுமான்

அஞ்சனை மைந்தனே!வாழி யனுமா னருந்தகையோய்
அஞ்சன வண்ணனி ராம னுருவோ ரரதனமாய்
நெஞ்சினு ளேற்றனை நின்னருள் நாடிநினைந்துனையே
தஞ்செனக் கண்டேன்தளிர் தரவாகந் தனிலடர்ந்தே. 1

ஆகத்துக் கொள்வா யனுமா னிராம னடியிணையைப்
போகத்துக் காமென் றுருகிப் புணர்த்தாயாற் புந்தியனே!
மாகத்து வாழ்வும் மதித்திலை நின்னரும் மாண்பிதனை
மோகத்துக் கொள்வேன் முகிழ்வி னினிக்க முனைந்
துளமே. 2

இனிக்கு முரைநல மெவ்வோ கலையு மிலக்கணமு
மனைத்து முனக்காவ அன்பனே! நாளு மபிநவமாய்ச்
சினைக்கு மிசையேழுந் சீர்க்க விராமன் திருவருளே
கனக்கக் கவிகள் பொழிவாய்நீ யீடிற் கவிவரனே! 3

ஈடிலா வேதங்கள் தம்மோ டிணைதரு மெண்கலையும்
நாடியே நம்பீ! நலம்பெறச் சேர்ந்தவுன் நாவடர்ந்தே
கேடிலாக் கீர்த்திநீ வாய்ந்தனை வானரர் கேசரியே!
பாடியுன் சீரெலா முய்வேன் பழவினை பற்றறவே. 4

உய்வே கவிகட் குயிராங் கதிர்மக னுள்ளமெழச்
செய்வ தமைச்செனத் தேறி யியக்குந் திறனுடையோய்!
நைதலறியா நயம்பெயும் நம்பீயுன் நாமநிரை
பெய்வ தருளே பெருகவோ ரூற்றின் பெருக்கெனவே. 5

அனுமானை வாழ்த்துவது. அந்தாதித் தொடர்.

1. இராமனை மனத்துள் வைத்தாய்; உன்னை என் மனத்துள் வைத்தேன். தஞ்சு—தஞ்சம். 2. வைகுந்தமும் விரும்பாமல் இங்கேயே இராமனையே நினைத்திருப்பாய். மாகம்—வான்; வைகுந்தம். 3. நீ அறிவன: உரை வளம், கலைகள், இலக்கணங்கள், இசை. சினைக்கும்—அரும்பும். 4. வேதங்கள், கலைகள் யாவும் உன் நாவை நாடி நலம் பெறுவன. கேசரி—சிங்கம். பழவினை—முன் பிறவிகளில் குவித்த தீவினைத் தொடர். 5. சுக்ரீவனுக்கு அமைச்சனானாய். கதிர்மகன்— சுக்ரீவன். நாமநிரை— உன்னைப் பற்றிய நாமாவளி.

ஊறேது மோரா துயர்வின் பறக்கு முரனுடையோய்!
பேராத வோங்கல் பெயர்த்துக் கரத்தற் பிணைத்தனை
ஆராத பத்தி யிராம னடியி லடர்த்தொளிர்வாய் [யால்
சோராத வன்பிலென் னெண்ணஞ் துளிர்தரத் தோய்ந்
தனையே. 6

எண்ணருந் தீரனே! எந்தாய்! திறலா ளிலங்கிணியை
மண்ணினிற் சாயப் புடைத்தாயால் மல்லார் வலியரக்கர்
கண்ணினிற் காத்தவோர் காவைக் கடிதிற் கவினழித்
தாய்
அண்ணலே! நின்திறல் பாடுவனேமுற வார்த்தகக்தே 7

ஏம மலையி லெழுந்தொளிர் வெய்யோ னெனமிளி நம்
வாம வடிவேற்றாய் நின்முகம் பாடல வண்ண முறும்
நேமத் தொளிபெய்து கற்பக நீழலில் நின்னகத்திற் [யே.
காமோ ரணியெனக் கொண்டா யிராமனா மையனை 8

ஐயறி வுங்கொளி ராம னழகோ டருணினைந்துன்
கைகள் குவியும் முகிழெனக் கண்கள் கலுழியிடும்
மெய்யுஞ் சிலிர்க்கும் விமலனே! உன்றன் வியனொளியே
பைவளர் சோதியிற் பாற்கர னொப்பப் படருவதே! 9

ஒப்புயர் வில்லாப் பரனோ டுயிர்க ளுயவிணைக்கும்
செப்பருஞ்செல்வக் குருவர னொப்பவோர் தேசுடையை
மைப்படி வண்ணனி ராமனும் மைதிலி வல்லரியும்
பெட்புறச் சேர்த்தா யுனதரு ளோதுவன் பேதறவே. 10

---

6. திறல்: வானிற் பறந்தாய், மலையைப் பெயர்த்துக் கரத்திற் கொண்டாய். ஓங்கல்—சஞ்சீவி மலை. 7. சலியாத் திறமை. இலங்கைக்கு அதிதேவதையான இலங்கிணியையும் வென்றாய். அசோக வனத்தை அழித்தாய். 8. ஏம மலை—மேரு. வெய்யோன்—சூரியன். வாம—அழகிய. பாடலம்—பாதிரி மலர். கற்பகத்தின் நிழலில் அமர்ந்து, இராமனை நினைத்திருப்பாய். இராமன் ஐயன் எனப் பிரிக்க 9. இராமனை நினைத்து உருகும் வகை. அருள் நினைந்து எனப் பிரிக்க. கலுழியிடும்—வெள்ளமிடும். வியன் ஒளி—வியக்கத்தக்க ஒளி. 0. ஆசாரியன் உயிர்களைப் பரனோடு இணைப்பதுபோல், சீதையை இராமனோடு இணைத்து வைத்தாய். வல்லரி—கொடி. பெட்பு—பெருமை.

ஓதுங் திறனட ரோதங் கடந்தனை யுத்தமியின்
பாதம் படிந்தவள் சோகக் கனலே படரமூலாய்க்
கேதங் கிளர்தர மாநகர் தீயுணக் கேடிழைத்தாய்
கோதி லமுதாவா யௌடத மாவாய் குருமணியே! 11

ஔவியம் பெய்யு மரக்கர் திறனெலா மோரவென
நொவ்வுறக் கோமான்றன் காவை நொடியில் நொடித்
தனைநீ
செவ்வியி ராமன் திருவுரு சேர்ந்தொளிர் சிந்தையினாய்!
திவ்வியதேசனே! என் கணிற் சேர்ந்து திகழுவையே. 12

கண்ணியங் கண்டனை தூது பகர்தலிற் கல்வியொடு
நுண்ணறி வன்பும் நுவலருஞ் சொற்றிறம் நொய்ப்பமுமே
நண்ணலர் முன்னருன் நாதனைப்போற்றினை நாவடர
அண்ணலே! நின்பதம் சன்மப் படர்வினுக் காம்
மருந்தே. 13

சன்மப் பகைகொள் தசமுகன் முன்னுந் தகையகிலா
வன்மம் பகர்ந்தனை மற்றுமி ராமன் வலியதனைப்
பன்னி விளக்கினை வாலொன் றிப் பாய்தரும் பாவகனுக்
கென்ன வகுத்தனை மாநகர் தன்னை யிடரெழவே. 14

தன்ம வடிவாகுஞ் சானகி கொண்ட தவநெறியை
உன்னி வியந்தனை யொப்பி லவட்கோ ருயவிதுவே
என்னே யெனநீ புழுங்கினை யக்கண மேயவடன்
இன்ன லகைத்தனை நம்பீ! யுனதா மிரக்கமிதே! 15

11. செய்தற் கரியன செய்தாய்: கடல் கடந்தது. நகரை எரித்தது. சோகம் - துக்கம். கனல்—நெருப்பு. கேதம்—துன்பம். 12. துணிவு: காவை அழித்தாய். 13. தூது புகர்வதற்கான ஏற்றம்: கல்வி, தலைவனிடம் அன்பு, நுண்ணறிவு, சொல்லின் திறமை. துணிவு: பகைவன் முன் உன் நாதனைப் போற்றினாய். 14. இராவணனிடம் துணிந்து பகையை ஓதினாய். வால் ஒன்றிப் பாய்தரும் பாவகன்—வாலிலே படிந்து படரும் தீ. பாவகன்—அழல். 15. சானகியின் பெருமை கண்டாய். உனது வியப்பு; இரக்கம். இரங்கிச் செய்தது. உனது ஆம் இரக்கம் இதே: இத்தன்மையது. அகைத்தனை—போக்கினாய்.

நம்பனே! நாண்மலர் நங்கை யணைந்து நலம்பொழியும்
நம்பியுன் னாக மணைந்துற்ற நட்பு நவில்தரவே
இன்பமொன் றேற்றா யிமையோர்க்கு மென்றுமே
யீதரிதால்
உன்பத மெற்கென்று மூன்றாம் படியரு ளுத்தமனே! 16

படிதரக் கொண்டனை மார்பினி ராமன் பதமலரே
படிவைநீ மற்றவன் பாதம் பரவும் பகவருழி [வாய்
வடிதருங் கண்ணீர் கரந்தமை மத்தகம் வைத்தொளிர்
அடியனே னார்ப்பன் மனந்தனி லுன்தனி யாக்கமிதே.

மனமோர் கருணைக் கடலென வாய்ந்த மலர்மகளோ
டிணையு மபிராம னேமப் பதமா மிணைமலரைக்
கனிவிற் பிடிப்பாய் திருவடி நீயென்பர் காசினியோர்
குனிவரா லுன்முன் வளனெலாங் கூறிக் குலவுவரே. 18

வளரு முனதன்பால் வாயு சுதனே! மனத்தெளிவும்
வளருஞ் சமதமம் வாய்க்குந் தவநெறி வாழ்வுயரும்
வளரும் மனந்தனி லன்பனி ராமன் மணியுருவம்
வளரும் மகிழ்வொடு பத்தியாம் வற்றாத வாரிதியே. 19

வற்றாத வாழ்வாம் மறிகடல் வற்ற மனத்தடரப்
பற்றாகச் சீராமன் பாதங்கள் பற்றிப் பரவுவதே
கற்றேனான் நின்னரு ளீதொன்றே கற்றுக் கருத்தடர
மற்றேது மஞ்சவோ சாரு மிடரெனில் மாருதியே? 20

16. இராமன் உன்னை யணைத்து நட்பு ஓதிய பெருமை. உன்பதம்எற்கு(எனக்கு)ஊன்று(ஊன்றுகோல்)ஆகும். 17. இராம னிடத்தும், அவனது அடியாரிடத்தும் பக்தி பகவர்—பக்தியாற் சிறப்புடையோர். மத்தகம்—தலை. 18. இராமபிரானது திருவடியைப் பிடிப்பாய்! உன் திருநாமம் சிறிய திருவடி (பெரிய திருவடி: கருடன்). 19. உனது அன்பால் பெறுவன. வாயு சுதன்—அனுமான். வாரிதி பெருங்கடல். 20. மறி கடல்—அலைகள் அடர்ந்த கடல். உனது அருளால் நான் கற்றது: இராமபிரானைப் பற்றுவது; துயர் நேர்ந்தாலும் அச்சமில்லை.

மாழ்கலிலே மன்னன் வணங்கிப்பின், "மானிதுகேள்
வாழியநீ அன்ப னிராமனையென்—கேழில்
அமிழ்தினையிங் கேயிருக்க ஆணைபகர்" என்று
கவிழ்ந்தனனே கண்கள் சுழன்று. 10

## 4. நகர் நீத்தல்

பொழுதுபுலர்ந் தெங்கும் புவிபாற் படர்ந்து
வழுவிலதா மின்பம் வளர—அழுது
புலம்பினனே பூமான் புரக்கும் புவியில்
அலம்பலிலே யாழ்ந்து துவண்டு. 1

"இறையவனைக் காண வென ஏகுவைநீ" யென்று
நிறைவுறவே யுள்ளம் நினைப்பாள்—குறை கழலான்
செல்வ னிராமனைத் தேவி பணிக்கவவன்
ஒல்லை படர்ந்தானா லாங்கு. 2

அத்தன் தரைக்கிடந்தோ ராக்கமுங் கூறகிலன்
சித்தஞ் சிதையவி ராமனோ—வைத்தகண்
வாங்காது நின்றிடவும் மாற்றம் பகருமிவள்
ஓங்கத்தன் தீமை யொளிர்ந்து. 3

"அன்பனே! நின்தந்தை ஆர்வி லெனக்கொருகால்
அன்புட னீந்த வரமிரண்டை—என்மனமோ [றான்
இன்றுகொள வேண்டவிவன், "ஒன்றீவன் மண்ணென்
ஒன்றிடவென் னுள்ளத்தி னூறு. 4

*10. மன்னன் தேவியை வேண்டிக் கொண்டது. மான்!—மான் போல் அழகியவளே! மாழ்கல்—மயக்கம்.*

*1. வேந்தன் பொழுது விடிந்தும் புலம்பிக் கொண்டிருந்தான். பூமான்—அரசன், அலம்பல்—துன்பம். 2. கைகேயி இராமனை வருமாறு ஏவ, அவன் ஆங்குவந்தான். 3. இராமன் கண்ட காட்சி. ஆக்கம்—ஆசி. தன் தீமை ஒளிர்ந்து ஓங்க, இவள் பகரும்: கூறினாள். மாற்றம்—சொல், வன்சொல், 4. கைகேயி கூறியது: ஒன்று—வரங்களில் ஒன்று: மண் ஈவன் என்றான்: வெறுப்புடன் கூறுவது. இராமன் கானகம் செல்லுவதே தனக்கு இன்பம் தரும் என்பது தோன்ற. ஊறு—துன்பம்.*

"இன்றே தவவுருவி லேழிரண்டாண் டுகள்நீ
குன்றின் திரள்மார்பா. தொல்கானம்—சென்றாங்கு
வாழுவையால் பாரிதற்கு மன்னாவான் நின்தம்பி
பாழித்தோள் வீரன் பரித்து." 5

"நல்லாய்நீ எற்கன்னை நானேற்பன் நின்னாணை
எல்லேயிம் மன்ன னியம்புவதென்?—தொல்கானம்
இப்போதே பேகுவனான்" என்றனனே காகுத்தன்
தப்பாமல் மூரல் தளிர்த்து. 6

"என்னுயிரே!" என்றழுதான் கோமானோ ஏதொன்றும்
பன்னும் நினைவிலனாய்ப் பாரினிலே—பின்னும்
படிந்தனனே நோக்கிலன் பக்கத்தும் கண்ணீர்
வடிந்ததுவே வாரிதியின் மிக்கு. 7

படிவிரும்பாச் செல்வன் பரிவுடையா ளன்னை
விடைவிரும்பி யோதிப் பிரிவை— அடிபணியக்
கன்று பிரிந்த கறவையெனக் கூவியவள்
நன்று நவின்றனளே வாழ்த்து. 8

இளகியுளம் மைதிலியு மெண்ணில் நலத்த
இளவலும் "நாமும்மைப் பிரியோம்—அளிவலனே!
எம்முடனே ஏகுவைநீ" என்றிறைஞ்ச ஓமென்றான்
செம்மனத்தான் சிந்தை சிறந்து. 9

5. கைகேயி கூறியது. குன்றின் திரள் மார்பா—குன்றிலும் திண்மை வாய்ந்த மார்புடையவனே! பாழித் தோள்—திண்ணிய தோள்கள். 6. இராமன், அவளது ஆணையை ஏற்றுக்கொண்டான். எல்லே.... இயம்புவது என்? உன் ஆணை ஒன்றே போதாதோ? மூரல் தளிர்த்து—முறுவல் தழைத்து, மிகுந்து. 7 தசரதன் ஏதும் கூற இயலவில்லை. பன்னும்—கூறும். வாரிதி கடல். வாரிதியில் மிக்கு வடிந்தது. 8. படி—பூமி, அரசாள்வது. கோசலையின் வருத்தம். வாழ்த்து நவின்றனள்—வாயார வாழ்த்தினாள். 9. இளவல்—தம்பி, லக்ஷ்மணன். ஓம் என்றான்—ஆகுக என்றான் செம்மனத்தான்—சிறந்த மனமுடையவன்.